# தஞ்சைப் பெருவுடையார் பிள்ளைத்தமிழ்



முனைவர் இராம. சிதம்பரம்

# தஞ்சைப்பெருவுடையார்ப் பிள்ளைத்தமிழ்



முனைவர் **இராம. சிதம்பரம்**

எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி.,

தமிழ்ப் பேராசிரியர்,

அடைக்கலமாதா கல்லூரி,

வல்லம் - 613 403.

தஞ்சாவூர்.







வெளியீடு

**மும்மகள் பதிப்பகம்**

விண்ணமங்கலம் - 613 602.

தஞ்சாவூர்

| | | |
|---|---|---|
| நூல் | : | **தஞ்சைப் பெருவுடையார் பிள்ளைத் தமிழ்** |
| ஆசிரியர் | : | முனைவர். **இராம.சிதம்பரம்** |
| முதல் பதிப்பு | : | ஜுன் 2005 |
| அளவு | : | 1/8 டெமி 1000 படிகள் பக்கம் - X + 113 |
| பதிப்புரிமை | : | **சி. அலைமகள்**<br>மின்னணுத் தொடர்பியல் பொறிஞர்,<br>விண்ணமங்கலம்-அஞ்சல்<br>தஞ்சாவூர் - 613 602. |
| கணினி வடிவம் | : | **கிரியா கிராபிக்ஸ்,**<br>38/3, ராஜா காம்ப்ளக்ஸ்,<br>கோர்ட் ரோடு,<br>ஆற்றுப்பாலம்,<br>தஞ்சாவூர். |
| அச்சு வடிவம் | : | **தினேஷ் ஆப்செட் பிரிண்டர்ஸ்,**<br>திருக்காட்டுப்பள்ளி - 613 104.<br>தஞ்சாவூர் மாவட்டம். |
| விலை | : | ரூ. **40 /-** |

I hereby declare that I am alone liable for any legal action at my own risk and responsiplity in any case of disputes or criticism if any arises after the publication of my book

- Dr. **RAMA. CHIDAMBARAM**

தமிழ் கூறு நல்லுலகில் தமிழுக்குத் தொண்டு செய்து
தமிழாலே தாம் வாழ்ந்து சிறந்த எம் மூதாதையர்க்கும்
தமிழறிவீந்த தகைசான்ற ஆசிரியப் பெருமக்களுக்கும்,
தமிழ் நலம் பேணும் நோக்கில் தரணியை நோக்கும் போது
உள்ளத்துக்கு உரமூட்டி ஊன்றுகோலாய் நின்று ஊக்கமும்
ஆக்கமும் தரும் இனிய மாணாக்க உள்ளங்களுக்கும்,
தொல்லை தரும் பகையை எல்லை நின்று காக்கும் இரும்பு
இதயங்களுக்கும், புகழுடம்பெய்திய போர்
மறவர்களுக்கும், இயற்கைச் சீற்றத்தின் இரக்கமற்ற
கொடுமையினால் இடையிடையே விட்டகன்ற இனிய
நறும்பூக்களுக்கும் காணிக்கையாக இந்நூலைப்
படைப்பதில் இறும்பூதடைகின்றேன்.

"This book is Published with the
financial assistance of
**TIRUMALA TIRUPATI DEVASTHANAMS**
Under their scheme
Aid to Publish religious Books"

# போற்றி !

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்

தேவனே திருவடி போற்றி !

அரியொடு நான்முகன் அளந்தறியாத

அமலனே நின்னடி போற்றி!

பிறையொடு நதியினைச் செஞ்சடை தரித்திடும்

பெரும்பொருள் நாதனே போற்றி!

ஓமெனும் மந்திரப் பொருளினை மகனிடம்

உணர்ந்தநின் மலரடி போற்றி!

பாமரப் பாங்கினில் மாநகர்க் கூடலில்

பிரம்படி பெற்றவா போற்றி!

வேதமும் காலமும் விளக்கிடத் துலங்கிடும்

வேடனே திருவடி போற்றி!

நாதமும் கீதமும் நடமிடத் தெரிதர

வரும்நட ராசனே போற்றி!

நீரொடு நிலமும் வளியொடு வெளியும்

தீயொடு கலந்தோய் போற்றி!

தேரொடு வீதியில் தினந்தொறும் வலம் வரும்

திருவை யாறனே போற்றி!

# சிவம்

பொன்னி நதிக்கரை மின்னி மிளிர்ந்திடும்
செந்நெலின் வளம்பாடிக்
கன்னித் தமிழரின் கழனி விளைந்திடும்
கன்னலின் நலம்பாடி
நஞ்சைக் கலப்பவர் நாவை நறுக்கிடும்
நறுந்தமிழ்ப் புகழ்பாடி
இஞ்சியும் மஞ்சளும் கொஞ்சித் தவழ்ந்திடும்
தஞ்சையின் எழில்பாடிப்
பொன்னும் பொருளும் கொடுத்துக் களைத்த
கரங்கொண்டிருப்பதுவே
மன்னர் மரபென மாத்திறம் போற்றியோன்
இராச ராசனீந்த
தஞ்சை உயர்புகழ் தரணிக் குணர்த்திடும்
தகைசால் பெருங்கோவில்
நெஞ்சில் நிறைந்துள நீர்சடை நாதனின்
திருவடி போற்றிடுவோம்!

# அணிந்துரை

பேராசிரியர். வீ. அரங்கன்
முன்னாள் துறைத்தலைவர்,
மொழியியல் துறை,
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்.

முனைவர். இராம.சிதம்பரம் அவர்கள் இயற்றிய தஞ்சைப் பெருவுடையார்ப் பிள்ளைத் தமிழ் என்னும் இந்த நூல் நம்கைகளில் தவழ்கின்றது. அவர்களுடைய இம்முயற்சி அனைவராலும் பாராட்டப்பெற வேண்டிய ஒன்று. தொழில் நுட்பத்தாலும், உலகமயமாதலாலும் சுருங்கிவிட்ட இன்றைய உலகில் மரபுகளும் பண்பாடுகளும் மொழிகளும் மறைந்து விடுமோ என்ற அச்சம் நிலவும் சூழலில் நாம் நம் பண்பாட்டு மரபைப் பாதுகாத்து வருகிறோம் என்பதற்கு இந்நூல் ஒரு சான்றாக நிற்கின்றது. புதுமையை ஏற்றுக் கொள்ளாத மரபின் எதிர்காலம் கேள்விக் குறியாகிவிடும். அதே போன்று மரபைப் போற்றிப் பாதுகாக்காத புதுமையின் வேரும் கேள்விக்கு உரியதாகிவிடும்.

புதுமையைத் தன்னுள் உள்வாங்கிக் கொள்ளும் மரபைக் கொண்டது தமிழ்மொழி. அந்த வழியில் முனைவர். இராம. சிதம்பரம் அவர்கள் தமிழின் மரபில் வந்த இலக்கிய வகைகளுள் ஒன்றான பிள்ளைத்தமிழ் என்ற இலக்கியத்திற்குத் தஞ்சைப் பெருவுடையாரைக் கருப்பொருளாக்கி நூலைப் படைத்துள்ளார். இந்த நூல் பக்தியை அடித்தளமாகக் கொண்டதோடு சமூகப் பொறுப்புணர்வையும் வெளிப்படுத்துகின்றது. மேலும் மக்கள் நலம்பெற்று வாழவேண்டும் என விழையும் நூலாசிரியரின் உணர்வையும் உட்கொண்டுள்ளது. இந்த நோக்கில் செல்லும் நூலின் கொள்கை "மானிடர் பக்தி உணர்வில் சமுதாயத்தையும் அதன் முன்னேற்றத்தையும் கருத்தில் கொண்டிருத்தல்" என்பது புலனாகின்றது.

இறைவனின் புகழை உணராதவர்களைப் பொருள் இருந்தும் பிறருக்குத் கொடுக்காதவர்களோடும், பல நூல்கள் பெற்றிருந்தும் முறையாக அவற்றைக் கற்காததால் பிறருக்குத் தெளிவாகக் கூற இயலாதவாகளோடும் ஒப்பிடுவதை,

"கற்றது விரித்துரைக்கக் கல்லாதார் தம் கரத்தே
கவிதைகள் கிடைத்தாற் போன்றும்
பெற்றது பகுத்தளிக்கச் சொல்லாதார் தம் அகத்தே
பெரும்பொருள் குவிந்தாற் போன்றும்"

(பாடல் - 19)

என்னும் பாடல் வரிகளால் உணரலாம். அதுபோன்று மொழி என்பது உயிரெழுத்து, மெய்யெழுத்து என இருவகை எழுத்துக்களால் இயல், இசை, நாடகம் என முப்பிரிவாய் இயங்குகின்றது என்று சுட்டப்பட்டிருப்பது சுவைப்பதற்குரியது. இதனை

"எழுத்து உயிர்மெய் இரண்டின் வழி இயங்குமொழி
இயல் இசை நாடகமாய்"

(பாடல் - 21)

என்னும் அடிகளால் அறியலாம். மானிடர் பலர் சிற்றின்ப ஈடுபாட்டில் காலத்தை வீணாய்க் கழிப்பதை,

"முல்லையம் பூநிரலின் முறுவலினைக் கொண்டார்தம்
முகை நகிலில் முயங்கிக் கால
எல்லையெலாம் போக்கி..."

(பாடல் -47)

எனச்சுட்டிச் சமூக மாற்றத்தை, ஆசிரியரின் விழைவு புலப்படுத்துகின்றது. இன்றைய பொருளியல் உலகில் சேமிப்பின் இன்றியமையாமையை,

"செலவில் ஒரு பாதியைச் சேர்த்து வைக்காதவர்
செல்லுமிடம் யாதினும் சேர்துயர் பல்லாயிரம்"
*(பாடல்- 58)*

எனவும், வறுமைமிக்கவரைக் கொடுமைப்படுத்தும் மானிட இயல்பை

"விருப்புற உழைத்துப் பிழைப்பவர் வயிற்றை
வெற்றிடமாக்குவோரை"
*(பாடல்- 61)*

எனவும், ஏழையர்க்குக் கொடுப்பவர் பற்றியும் அதனைத் தடுப்பவர் பற்றியும் கூறுமிடத்து,

கொடுப்பதிலே சிலருக்குக் கொள்ளை ஆசை
..................
தடுப்பதிலே பலருக்குத் தனித்த ஆசை
*(பாடல் - 91)*

எனவும் ஆசிரியரின் உணர்வு வெளிப்படுதல் கண்டு வியபபடைய முடிகின்றது. இதுபோல் பல பகுதிகளை நாம் சுட்டிக்காட்டி இந்த நூலின் சிறப்பை உணர்த்தலாம்.

பேராசிரியர் முனைவர். இராம.சிதம்பரம், அவர்கள் கடின உழைப்பாளி; சிறந்த பேச்சாற்றல், எழுத்தாற்றல் மிக்கவர்; நல்லதொரு பேராசிரியர். இவர் முயற்சியைத் தமிழுலகம் வரவேற்றுப் பாராட்டும் என நான் நம்புகிறேன். அவருடைய தமிழ்ப்பணி தொடர்ந்து வளரப் பராட்டி வாழ்த்துகின்றேன்.

இவண்

**வீ. அரங்கன்**

## வாழ்த்துரை

முனைவர். இரா. காத்தையன்
முதல்வர்
அடைக்கலமாதா கல்லூரி
வல்லம், தஞ்சாவூர்.

தஞ்சைப்பெருவுடையார்ப் பிள்ளைத் தமிழ் என்ற மிகச்சிறந்த இந்நூலின் ஆசிரியர் முனைவர். இராம. சிதம்பரம் அவர்கள் சிறந்த தமிழறிவும் அன்பு, பணிவு, துணிவு முதலான நல்லியல்புகளும் பெற்றிருக்கும் நல்ல நண்பர்; தமிழ் கற்றார் மரபில் தோன்றியவர்; மேடைப்பேச்சு, நூல்படைப்பு, விளையாட்டு முதலான பல துறைகளிலும் ஆற்றல் பெற்றிருப்பதோடு நகைச்சுவையாகப் பேசிப்பழகுதல், மாணாக்கர்களை நெறிப்படுத்துதல் போன்ற பண்புகளிலும் சிறந்து விளங்குபவர் முனைவர் இராம. சிதம்பரம்.

இவர் பக்தி நூல்களைப் படைப்பதில் வல்லவர்; தமிழ்ப் பணியைத் தலையாய பணியாகக் கொண்டு வாழ்பவர்.

**"இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து**
**அதனை அவன்கண் விடல்"**

என்ற திருக்குறளுக் கேற்ப வழங்கப்பெறுகின்ற கடமைகளைச் செவ்வனே செய்து முடிக்கும் ஆற்றல் படைத்தவர். தாம் முனைவர் பட்டம் பெற்றுள்ளதோடு அமையாமல் மேலும் பலர் முனைவர் பட்டம் பெறுவதற்கான ஆய்வு நெறியாளராகப் பணியாற்றிவருவதும், தமிழில் நூல்கள் இயற்றி வெளியிடுவதும் தமிழ்மீது இவர் கொண்டிருக்கும் மொழிப்பற்றுக்குச் சான்றுகளாகும்.

இவர் மொழிப்பணியைச் சீரோடும் சிறப்போடும் ஆற்றிப் புகழின் உச்சிக்கே செல்ல உளமார வாழ்த்துகிறேன்.

இவண்

முனைவர். இரா. காத்தையன்

## பாராட்டுரை

பேராசிரியர். என். சிதம்பரவல்லி
தமிழ்த்துறைத்தலைவர்,
அடைக்கலமாதா கல்லூரி,
வல்லம், தஞ்சாவூர்.

முனைவர். இராம.சிதம்பரம் அவர்கள் தஞ்சைப் பெருவுடையார்ப் பிள்ளைத்தமிழ் எனும் இந்த நூலைப் போன்று மரபுச் செய்யுள்களால் ஆகிய நூல்களை இயற்றுவதில் வல்லவர். இவர் தாருகேசரந்தாதி, வீரமாகாளி வெண்பாமாலை போன்ற நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்; இலக்கணத் திறத்துடன் மரபுச்செய்யுள் இயற்றும் ஆற்றல் மிகவுடையவர்; நகைச்சுவை மாண்புடையவர், பல இலக்கிய நிகழ்வுகளைச் சிறப்புற நிகழ்த்தவும், பங்கேற்றுத் திறங்காட்டவும் கூடிய வல்லமை படைத்தவர்.

தஞ்சாவூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானாகிய பிரகதீசுவரர் மீது பிள்ளைத் தமிழ் நூல்பாடும் பெருமை பெற்று விளங்கும் இவருக்கு இறையருள் மேன்மேலும் பெருக இறைஞ்சுகின்றேன். எண்ணியபோதே செய்யுள் படைக்கும் இவருடைய திறத்தை வியந்து போற்றச் சொற்களில்லை. மாந்தரிடையே ஆன்மீக உணர்வு மங்கிக் கொண்டிருக்கும் இற்றை நாளில் இத்தகைய பக்தி நூல்கள் இயற்றுதல் போற்றுதற்குரியது. குறிப்பாகச் சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்றான பிள்ளைத்தமிழ் எழுதியிருப்பது கண்டு மிக்க மகிழ்ச்சியும் பெருமையும் அடைகின்றேன். செம்மொழியாகிய நம்மொழியில் நல்ல பல நூல்கள் உருவாக வேண்டும் என்ற நம் அவாவை நிறைவேற்றும் முனைவர். இராம. சிதம்பரம் அவர்கள் தஞ்சைப் பெருவுடையார்ப் பிள்ளைத் தமிழ் வழங்கியிருப்பது தமிழ்ச்சான்றோர்களைப் பெருமை கொள்ளச் செய்கிறது. இந்த நற்பணியை இராம. சிதம்பரம் அவர்கள் தொடர்ந்து செய்து புகழுற என்னுடைய அன்புள்ளத்தால் வாழ்த்துகின்றேன்.

இவண்

**என்.சிதம்பரவல்லி**

# உள்ளடக்கம்


| | பக்கம் எண் |
|---|---|
| முன்னுரை | 1 |
| பிள்ளைத்தமிழ் - விளக்கம் | 4 |
| தலச்சிறப்பு | 9 |
| காப்புப் பருவம் | 11 |
| செங்கீரைப் பருவம் | 22 |
| தாலப் பருவம் | 32 |
| சப்பாணிப் பருவம் | 42 |
| முத்தப் பருவம் | 52 |
| வருகைப் பருவம் | 62 |
| அம்புலிப் பருவம் | 72 |
| சிற்றில் பருவம் | 82 |
| சிறுபறைப் பருவம் | 92 |
| சிறுதேர்ப் பருவம் | 102 |
| பாடல் முதற்குறிப்பு அகராதி | 112 |

## முன்னுரை

திருவுடையார் உள்ளம் தினம்தேடிச் சூழும்
பெருவுடையார் பேரருள் முன்

அண்டம் முழுதுலவும் ஆயிரங்கோடி உயிர்களையும் அன்றாடம் இயக்கியருள் கண்டம் கறுத்துலவும் கற்றைச் சடை முடியான் தன் கருணை மிகுந்த கண்களால் அருளைப் பொழிந்து மானிடர் தம் பாவங்களைப் போக்கிப் பலன்களை வழங்கி வருகின்றார். மாற்றார் பொருளை மனத்தகத்தே விரும்பிப் போற்றா இயல்புடனே வாழ்வாரும், சற்றும் இரக்கமின்றிச் சதிச்செயற்குத் திட்டமிட்டு வெட்டிக்கொலை புரிந்து விலங்குகளாய் வாழ்வாரும், கொட்டிக் குவித்திருக்கும் கோடியெலாம் போதாதென்று வட்டிக்குக் கொடுத்து வாங்கிக் குவிக்கின்ற வஞ்சக நெஞ்சத்தாரும். ஊர்ப்பணத்தை ஏப்பமிட்டு உடல் கொழுக்க உண்பாரும், சுகமான வாழ்வுக்காய்ச் சுரண்டிப் பிழைப்பாரும், காமத்தின் பெயராலே கண்ணியத்தை இழந்திட்டுக் கண்டபடித் திரிவாரும் என இப்புவியின் பசுமையைப் பொசுக்குகின்ற கூட்டத்தை, அவர்களுடைய தீயகுணங்களைச் சுடர்வீசும் நுதற்கண்ணால் சுட்டெரித்துக் கருணை மழைபொழிந்து காப்பவன் நம் திரிசூல நாயகன். அந்தத் திருவருள் பொழியும் தேவனின் திருவடி முன் வீழ்ந்து தேவையான வரங்களைப் பெறத்தினமும் கோடிக்கணக்கான மக்கள் கூடிநின்று வணங்குகின்றார்கள்.

தூய உள்ளமும், தொண்டு செய்யும் ஆசையும், பிற உயிர்களைத் துன்பத்திற்கு ஆளாக்காத பெருந்தன்மையும், வாய்மை பேணலும் கடைப்பிடிக்கின்ற மானிடன் கடவுளுக்குச் சொந்தக்காரனாகிறான் மக்களுடைய உள்ளத்தில் இறைச்சிந்தனை நிலைத்திருந்தாலே தீமைகள் விலகி நன்மைகள் பெருகும். ஆன்மீக உணர்வு அருகிவரும் இற்றைநாளில் இறைநாட்டத்தை மேம்படுத்தி, இதயம் இறைவன் மீது செல்லத் தொடங்கின் இவ்வுலகப் பற்றினால்

ஏற்படும் ஆசைகள் குறைந்து அதனால் உண்டாகும், அவலங்கள் குறையுமன்றோ! ஆசைகளே அழிவுக்குக் காரணம். அன்பு மறைந்து பல கொடுமைகள் நிகழ்வதற்கு அடிப்படைக் காரணம் அவரவர் ஆசைகளே. ஒப்பற்ற பரம் பொருளாம் இறைவன் மீது நாம் கொள்ளும் ஆசை பக்தியெனும் பெயரோடு நம்மைப் பாதுகாக்க வேண்டும்; நன்னெறியில் கொண்டு செலுத்த வேண்டும். சுயநலங்கூடிய வெறிச்செயலாக மாறுதலாகாது. மனத்தை, மனித இனத்தைப் பக்குவப்படுத்தும் சிறந்த நெறியாகச் சிவநெறி அமைதல் வேண்டும்.

"அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாரே"

என்னும் திருமூலரின் சிவச்சிந்தனை இன்றைய உலகமாந்தர்க்கு உடனடித் தேவை. அன்பில் சிவம் திளைத்திருக்கிறது. உயிர்களிடத்து நாம் கொள்ளும் அன்புநெறியே சிவநெறியில் செல்லுதற்குச் சான்றாகும். மானிடர்தம் ஆன்மாவை இறைவன் மேல் செலுத்தும் போது தேவையில்லாதவைகளைச் சிந்திக்கின்ற காலம் குறைகின்றது, அல்லது அவைபோன்ற எண்ணங்கள் அறவே தோன்றாதொழிகின்றன; நல்ல சிந்தனையே நாளும் பெருகிடும். தீய சிந்தைகளால் சமுதாயத்திற்கு ஏற்படும் விளைவுகளும் கொடுமைகளும் குறைந்து விடுகின்றன அன்றோ!

ஆலயத்திற்குச் சென்று ஆண்டவனைத் தரிசிப்பதாலும், வழிபாடு தொடர்பான சிந்தனைகளையே கொண்டிருப்பதாலும், ஆன்மீக நூல்களைப் படித்துக் கொண்டிருப்பதாலும் மனத்துக் கண் உள்ள மாசினங்கள் அடியோடொழிந்து, எண்ணம், சொல், செயல் தூய்மையடைகின்றன. முற்றிலுமாக நெற்றிக் கண்ணனை நினைக்கும் போது சற்றும் தளர்வில்லாக் குறைவில்லா வாழ்க்கை அமையும்.

இற்றைநாளில் ஏராளமான புதுக்கவிதைகள் நறுக்கெனவும், சுருக்கெனவும் தோன்றுகின்றன. இதே நிலை நீடித்தால் செய்யுள்

இலக்கண மரபு செயலற்றுப் போய் விடுமோ? எனும் அச்சவுணர்விலும், உள்ளத்தில் ஏற்பட்ட பேருந்துதலிலும் இந்தப் பிள்ளைத் தமிழ் நூலைப் படைத்துள்ளோம். எளியேமின் இந்த முயற்சி இலக்கிய உலகின் எல்லைக் கற்களுள் ஒருகல்லாய் அமையும் என நம்புகிறோம். இதனைச் சிறுகல் எனச்சிதைத்துப் பேசுவாரும், உருகல் என உணர்ந்து பேசுவாரும் மிகுந்துள்ள இப்புவியில் எனக்கொரு விளக்கென நின்று ஒளியூட்டி உரமேற்றிய எந்தைக்கும், இரவலனேற்கு இலக்கணப் பசி போக்கிய ஆசிரியப் பெருமக்களுக்கும், தளர்நிலை கண்டு வளர்நிலை கூறிய இனிய நண்பர்கள் பால.செழியன், பொறிஞர் மனோகர், ஆசிரியர் என்.கண்ணன் ஆகியோர்க்கும், அன்பு மாப்பிள்ளை கரூர் பிரபு அவர்களுக்கும், தம்பியாய், நண்பனாய்த், தலைவனாய் நின்று என்னை ஊக்கிய சென்னை கோ.தி.கருப்பசாமி அவர்களுக்கும், திருமதி எஸ்.பெரியநாயகி, திரு.அ.அண்ணாத்துரை, திருமதி.கா.இலட்சுமி அவர்களுக்கும்,என்னுடன் பணியாற்றும் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் திருமதி என்.சிதம்பரவல்லி, திரு.சோ.சந்திரசேகர், திரு.மா.சண்முகம் ஆகியோர்க்கும் விண்ணமங்கலம், ஊராட்சிமன்றத் தலைவர் க. திருநாவுக்கரசு அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகின்றோம்.

குறிப்பாகத் தஞ்சைப் பெருவுடையார்ப் பிள்ளைத்தமிழ் என்னும் இந்த நூலைப் போன்று பல துறை நூல்களைப் படைக்கப் பல்லாற்றானும் அருளாசி வழங்கிக் கொண்டிருக்கும் வல்லம் அடைக்கலமாதா கல்லூரித் தலைவர் திருமிகு டாக்டர் அ.அருணாசலம் அவர்களுக்கும், கல்லூரிச் செயலர் பேராசிரியர் திரு.அ.இரவிக்குமார் அவர்களுக்கும், கல்லூரி முதல்வர் திரு.டாக்டர் இரா.காத்தையன் அவர்களுக்கும் என்றும் நன்றியுடையேம்.

இந்நூலைக் கணிணி உருவில் வடிவமைத்துத் தந்த கிரியா கிராபிக்ஸ் உரிமையாளர் திரு.கே.வி.கருணாநிதி அவர்களுக்கும் நூலாக்கித்தந்த திருக்காட்டுப்பள்ளி தினேஷ் ஆப்செட் பிரிண்டர்சுக்கும், இந்நூல் வெளிவர உதவிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் நன்றியை உரித்தாக்கி மகிழ்கின்றோம்.

**இராம.சிதம்பரம்**

# பிள்ளைத் தமிழ்

சங்க காலத்திற்கும், சங்கம் மருவிய காலத்திற்கும் பின்னர்த் தோன்றியவையே சிற்றிலக்கியங்கள். இவற்றைப் பிரபந்தங்கள் என்பர். இவை தொண்ணுற்றாறு வகையாய் வழங்கப் பெறுகின்றன. அந்தாதி, உலா, கலம்பகம், தூது, பரணி, பள்ளு, பிள்ளைத்தமிழ் போன்றவை சிற்றிலக்கியங்களுள் அடங்கும். இவற்றுள் பிள்ளைத்தமிழ் வகையிலக்கியமே காலத்தால் முதலாவதாக நிற்பதுடன் மிகுதியாக வெளிவந்துள்ளது எனலாம். இவ்வாறு எழுந்துள்ள பிள்ளைத்தமிழ் நூல்களுள் பெரும்பான்மை ஆண்பாற் பிள்ளைத்தமிழ் நூல்களாகக் காணப்பெறுகின்றன. ஆண், பெண் கடவுளரைப் பற்றியே முதலில் இயற்றியுள்ளனர். காலப்போக்கில் வணங்கத்தக்க வகையில் வாழ்ந்தவர்கள் மீதும். தம்மைவிடச் சான்றோர்களாய் வாழ்ந்தவர்கள், வாழ்பவர்கள் மீதும் பிள்ளைத் தமிழ் நூல்களைப் பாடினர். கடவுளரைச், சான்றோர்களை இவ்விலக்கியத்துக்குரிய தலைமக்களாய்க் கொண்டு அவர்களைக் குழந்தைகளாய்க் கருதிப் பத்துப் பருவங்களாகப் பகுத்து, ஒவ்வொரு பருவத்திற்கும் பத்துப் பாடல்கள் என நூறு பாடல்களால் அமைப்பதும் மரபு. முதல் ஏழு பருவங்கள் காப்பு, செங்கீரை, தாலம், சப்பாணி, முத்தம், வாரானை (வருகை), அம்புலி என்பன இருபாற்பிள்ளைத் தமிழுக்கும் பொதுவாகவும் , ஏனைய சிறுபறை, சிற்றில், சிறுதேர் எனும் மூன்று பருவங்களும் ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்கும், கழங்கு, அம்மானை, ஊசல் எனும் மூன்று பருவங்களும் பெண்பாற் பிள்ளைத் தமிழுக்கும் உரியன ஆகும். கழங்கினை விடுத்து நீராடல் எனக் கொள்வாரும் உளர்.

## பிள்ளைத்தமிழ் தோற்றம்

உலகில் வாழும் பலகோடி உயிரினங்களுள் அரிய பிறவி மானிடப் பிறவி. ஆம், உள்ளத்தில் தெளிவும், உணர்வில் திறமும் கருத்து நலமும் கற்பனை வளமும் பகுத்தறியும் பாங்கும் ஒருங்கே அமையப் பெற்றவன் மனிதனே; மறுப்பதற்கில்லை.

*மனிதன் தன் மனத்தில் தோன்றியவற்றை வெளிப்படையாக வெளிக்காட்டவும் மறைக்கவும் தெரிந்தவன். மானிடர் தம்மிடம் அமைந்துள்ள பேராற்றலை ஆக்க வழிகளில் வெளிப்படுத்தினால் யாவர்க்கும் நலம் தரும். அணுசார் அறிவியல் மேன்மைகளும், பொருள்சார் புது நூல்களும், மக்கள்பால் மனிதநேயமும் எனப் பொங்கிவரும் புது வெள்ளத்தைப் பொதுவாய் வெளிப்படுத்திய பேராளர்களின் பெருந்தன்மையை நாம் அறிகின்றோம். தொண்டில் தூய்மையும், துணிவில் நேர்மையும் என வாழ்வியல் நெறிகளை வகுத்துச் சென்றவனும் மனிதனே. மனம், மொழி, செயல் எனும் மூன்று நிலைகளிலும் தூய்மை நிறைந்திருப்பின் மானிட சமுதாயம் மகத்தான சாதனை எல்லைகளை எட்டும்.*

*எண்ணத்தில் பொறாமை, மொழியில் ஆணவம், செயலில் வஞ்சகம் கலந்துவிட்டால் மனிதத்தன்மை நீங்கி விலங்குகளாய் மனிதன் விளங்குவான். உயிரினங்களுள் இத்தகைய மனிதப்பிறவியின் குழந்தைப்பருவம் எல்லோராலும் விரும்பப்பெறும் பருவமாகும். குழந்தையில்லாக் குடும்பம் குறையுடையதாகவே இன்றைய சூழலிலும் கருதப்பட்டு வருகிறது.*

*எத்தனைச் செல்வம் பெற்றிருந்தவராயினும் இளஞ்சிட்டுக்களாம் மழலைச் செல்வம் இல்லாவிடின் மனத்துயரங்கொண்டு கலங்கிவாழும் மானிடரைக் காணமுடிகின்றது. இதனை,*

**"........பெருஞ்செல்வராயினும் இடைப்படக்**
**குறு குறு நடந்து சிறுகை நீட்டி**
**இட்டும், தொட்டும் கவ்வியும் துழந்தும்**
**நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்**
**மயக்குறு மக்களை இல்லோர்க்கு**
**பயக்குறு இல்லை தாம் வாழு நாளே"**

*(புறம் -188)*

*என்ற புறப்பாட்டு வழி அறியலாம்*

பொய்யாமொழியாரும்,

**"பெறுமவற்றுள் யாம் அறிவது இல்லை அறிவறிந்த**

**மக்கள் பேறு அல்ல பிற"**

*(குறள் -61)*

எனச்சுட்டுகின்றார். மாந்தர் தம்மக்கட்பேற்றுப் பயனால் அடையும் இன்பத்திற்கு ஈடில்லை. பிள்ளைச் செல்வங்களின் பிஞ்சுக் கரங்களால் அளாவப் பெற்ற உணவு அமுதத்தை விடவும் இனிமை தருவதாகும் என்று பெற்றோர் கருதிவாழ்கின்றனர் என்ற பொருள்பட,

**"அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்**

**சிறுகை யளாவிய கூழ்"**

*(குறள் -64)*

என்னும் திருக்குறளைத் திருவள்ளுவர் படைத்துள்ளார். மேலும் மக்கள் மெய்தீண்டலினால் உடலுக்கு இன்பத்தையும், மழலையர் சொல் கேட்டலால் உளத்துக்கு இன்பத்தையும் பெற்று வாழ்ந்த பெற்றோர்கள் தம் குழந்தைகளைப் பாதுகாக்கும் முறையும், வளர்ச்சிக்கேற்ப அவர்களை வாழ்த்தி மகிழும் முறையும் வளர்ந்தன. மழலையர் என்பது ஆண்பால், பெண்பால் என இருபால் குழந்தைகளையும் குறிக்கும் என்ற போதிலும் ஆண்மகவின் சிறப்பே தொன்றுதொட்டுப் பெரிதும் போற்றப்பெற்று வந்தது.

**குழவி மருங்கினும் கிழவதாகும்**

*(தொல் - பொருள் - 84)*

எனும் சங்ககால இலக்கண நெறியறிந்து குழந்தையிடத்தில் கொண்ட அன்பினால் அக்குழந்தையைப் பாடுவதற்கும் நாம் வழிகளை அறிந்தோம். குழந்தைகளை வருக என்றழைத்தல் முத்தம் தரக்கேட்டல், நிலவைக்காட்டல், சிறுதேர் உருட்டி விளையாட

வேண்டல் போன்றபல நிலைகளில் குழந்தைப் பருவத்தைப்பாடி, நூலாக்கி மகிழும் நெறியிலும் வாழ்ந்து வருகின்றோம்.

ஆழ்வார்களுள் விஷ்ணுச்சித்தர் எனப்போற்றப் பெறும் பெரியாழ்வார் திருமாலைக் குழந்தையாய்க் கொண்டு அவர்மீது பல்லாண்டு பாடிப்பல பருவங்களில் பாடல்கள் புனைந்துள்ளார். இதுவே பிற்காலத்தில் தோன்றிய பிள்ளைத்தமிழ் நூல்களுக்கு வழிகாட்டுதலாய் அமைந்தது எனலாம்.

பிள்ளைத்தமிழ் என்ற நூற்குப் பன்னிரு பாட்டியல் என்ற இலக்கண நூல்,

**"தோற்றம் முதல் யாண்டு ஈரெட்டளவும்**
**ஆற்றல் சான்ற ஆண்பாற்குரிய"**

என்று பருவங்களுக்கான நெறியை வகுத்து ஆண்களுக்கு முதன்மை தந்துள்ளது. பின்னர்ப் பெண்பாற் பிள்ளைத் தமிழ் நூல்களும் எழுதப் பெறலாயின. மேலும்

**"அகவல் விருத்தமும், கட்டளை ஒலியும்**
**கலியின் விருத்தமும் கவின்பெறு பாவே"**

(பன்.பாட்-189)

எனப்பிள்ளைத் தமிழுக்குரிய பாவகைக்கு வரையறை கூறியுள்ளதை அறியலாம்.

தஞ்சைப் பெருவுடையார்ப் பிள்ளைத்தமிழ் ஆகிய இந்த நூலில் ஆசிரிய (அகவல்) விருத்தங்களே பாடப்பெற்றுள்ளன. எண்சீர் ஆசிரிய விருத்தங்களும், எழுசீர் ஆசிரிய விருத்தங்களும் மட்டுமே இந்நூலில் இடம் பெற்றுள்ளன. குறிப்பாக 1,3,5,7,9 என உள்ள ஒற்றை எண்களில் எழுசீர் விருத்தங்களும் 2,4,6,8,10,12 என உள்ள இரட்டை எண்களில் எண் சீர் விருத்தங்களுமாக அமைக்கப் பெற்றுள்ளன.

காப்புச் செய்யுள் ஒன்றுடன், பத்துப் பருவங்கட்கும் முறையே பத்துப் பாடல்களாக நூறு பாடல்களையும் சேர்த்து நூற்று ஒன்று உள்ளன.

**"ஒன்பது பதினொன்று என்பது காப்பே"**

எனும் இலக்கண விளக்க(51) நெறிப்படி இங்குக் காப்புச் செய்யுள் காப்புப் பருவத்துடன் சேர்க்கப் பெற்றுள்ளது. பிள்ளைத் தமிழ் இலக்கியத்தைப் பிள்ளைப்பாட்டு, நெடுவெண்பாட்டு என வேறு பெயரிட்டும் அழைப்பர் என்பதை,

**"பிள்ளைப்பாட்டே நெடுவெண்பாட்டெனத்**

**தெள்ளிதின் செப்பும் புலவரும் உளரே"**

(பன்-பாட்-190)

என்ற நூற்பாவழி அறியலாம்.

தஞ்சைப் பெருவுடையார்ப் பிள்ளைத்தமிழ் என்னும் இந்நூலில் எழுசீர், எண்சீர் ஆசிரிய விருத்தங்கள் இடம் பெற்றமை அறிந்தோம். ஆசிரிய விருத்தங்களுக்கு,

**அகவல் விருத்தம் கழிநெடில் நான்கொத்து**

**இறுவது இயலே**

(காரிகை - 30)

எனக்காரிகை நெறிபுகட்டியுள்ளமை கருதியே கழிநெடிலடிகளால் அளவொத்து அமைந்த எழுசீர், எண்சீர் ஆசிரிய விருத்தங்கள் பாடப் பெற்றுள்ளன.

மண்ணின் சிறப்பும், மன்னராட்சியில் மக்களாட்சி செழித்தோங்கியிருந்த சீரும், இயற்கை வளமும், இறைவனின் பேரருளும் ஈண்டு எழுதப்பெற்றுள்ளமை நோக்கின் இந்தத் தெய்வத் திருநாட்டின் பெருமை புலனாகும்.

## தலச்சிறப்பு

இந்தியப் பெருநிலத்தில் பண்டைத் தமிழகம் பரந்து விரிந்த பகுதியாய்த் திகழ்ந்தது. அதனுள் சேர, சோழ, பாண்டியர்கள் பேரரசர்களாகவும் நாட்டின் உட்பகுதியில் குறுநில மன்னர்கள் பலரும்பேரரசர்களின் ஆட்சிக்கு உட்பட்டுத் திறைசெலுத்தி மன்னராட்சி எனும் பெயரில் மக்கள் போற்றும் நல்லாட்சி புரிந்து வந்தனர். மூவேந்தர்களில் சோழர்களின் பகுதி சோழநாடு, சோழவளநாடு, சோழ மண்டலம், சோணாடு எனப் போற்றப் பெற்று வந்தது. சோழமண்டலத்தின் தலைநகராய்த் திகழ்ந்த ஊர்களுள் தஞ்சாவூரும் ஒன்றாகும்.

வான் பொய்ப்பினும் தான் பொய்யா வளமான காவிரி நதி பாய்ந்து எந்நாளும் செழிப்பாகவும் செந்நெல், கன்னல், கதலி, இஞ்சி, மஞ்சள் போன்ற பயன்தரு பயிர்கள் தழைத்து விளங்குவதோடு எப்போதும் குளிர்ச்சியான நிலப்பரப்பாக இருந்ததாலும் தண்மை+செய் என்ற சொற்கள் இணைந்து தண்செய் ஆகிக் காலப் போக்கில் தஞ்சை எனவும், அத்துடன் ஊர் சேர்ந்து தஞ்சாவூர் எனவும் வழங்கி வருவதை அறியலாம்.

பொன்னிநதி இருமருங்கும் பொன் கொழிக்கப் புதுப்புனல் தந்து மன்னர் பெருமை காத்து மக்கள் வறுமை போக்கி உயிர்காக்கும் உயர்நதியாய்ப் பாய்கிறது. ஆற்றங்கரை நகரங்கள் எனப் போற்றிப் புகழும்வண்ணம் மிகுந்த சிறப்போடு விளங்கும் தஞ்சாவூர்ப் பகுதியில் மக்கள் ஆன்மீகம், உழவு, வணிகம், கல்வி, கலை, அறிவியல் போன்ற துறைகளில் மேனிலை பெற்றுத்திகழ்கின்றனர்.

இந்த எழில்மிகு தஞ்சைக்கு மேலும் பெருமை சேர்க்கும்வகையில் சோழப்பேரரசன் இராசராசனால் ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் எழுப்பப்பெற்றுப் பெருமிதத்துடன் நிமிர்ந்து நிற்கும் கலைச்சின்னமே தஞ்சைப்பெரியகோவில். இங்குச் சிவபெருமான் வீற்றிருந்து வேண்டுமருள் வழங்குகிறார். பிரகதீசுவரர் என வடமொழியிலும் பெருவுடையார் எனத் தமிழிலும் போற்றப்

பெறும் பெருமான் பெரியநாயகி (பிருகன் நாயகி)யுடன் எழுந்தருளி மக்கள் நலம் பேணுகிறார்.

தஞ்சைப் பெரிய கோவில் வழிபாட்டுத்தலமாக மட்டுமல்லாமல் தமிழரின் வரலாறு, கலை, பண்பாடு ஆகியவற்றின் பெருமைக்கும் பறைசாற்றித் திகழ்கிறது. இஃது இந்தியத் திருநாட்டின் கலைச்சின்னங்களுள் ஒன்றாகவும், சுற்றுலாத்தலமாகவும் விளங்குகின்றது. இராசராச மன்னரின் இந்தத் திருப்பணி, ஆன்மீகச் சிந்தனையில் மக்கள் ஈடுபட்டால் பிற பொல்லாச் சிந்தனைகள் குறைந்து நாடு அமைதியாயிருக்கும் எனவும், வழிபட வருவோர் ஒருவர்க்கொருவர் அன்புறப் பழகி நாட்டில் ஒற்றுமை நிலைத்திருக்கும் எனவும், நாட்டில் நல்லாட்சி நிலவ வேண்டும் எனவும் அவன் உளத்தில் கொண்டிருந்த கோட்பாட்டின் வெளிப்பாடாகி அமைந்தது எனலாம். அதற்கு ஒப்பவே தஞ்சைப் பெருவுடையார் திருக்கோவிலுக்கு நாள்தோறும் ஆயிரக்கணக்கில் மக்கள் வந்து வழிபட்டவண்ணம் உள்ளனர்.

அரசரின் சிறப்பும், ஆலயச் சிறப்பும் எண்ண எண்ண விரியும். அந்தப் பரம்பொருளின் பெரும்புகழைப் பாடிப்பரவுவோம்.

**இராம.சிதம்பரம்**



## 1. காப்புப் பருவம்
### (நூல் காப்பு)

1. வேழத்தின் தோற்றத்தில் வீற்றிருந்து வினைபோக்கும்
விளையாட்டு முதல்வனே! உள்ளத்
தாழத்தில் ஊற்றெடுத்துப் பெருகிவரும் பேரன்பின்
உறைந்தபெரு மலையே! உண்ணும்
கூழுக்குக் கொடுமைபல கண்டுமனம் வாடுகின்ற
கூட்டத்துள் கொள்கை காக்கும்
ஏழைக்குப் பெருவுடையார்ப் பிள்ளைத்தமிழ் பாடஅருள்
கணபதியே! காப்பு நீயே!

*கருத்துரை :-*

*யானையின் திருமுகத் தோற்றத்துடன் வீற்றிருந்து தீவினைகளைப் போக்குகின்ற விளையாட்டுத் தலைவனே! அடியவர்களின் உள்ளத்தின் ஆழத்தில் ஊற்றாகப் பெருக்கெடுத்துவரும் பேரன்பில் உறைந்துள்ள பெரிய மலைபோன்ற விநாயகக் கடவுளே! உணவுக்காகப் பல கொடுமைகளைச் சந்தித்து வாடுகின்ற மக்கள் கூட்டத்தினுள் ஏழையாகிய யான் தஞ்சைப் பெருவுடையார்ப் பிள்ளைத் தமிழ் என்னும் நூல் இயற்றிச் சிறப்புறக் கணநாதனே ! எமக்கு அருள்புரிந்து காப்பாயாக!*

*அடியவர்களின் உள்ளத்தில் வீற்றிருக்கும் காப்புக் கடவுள் கணபதி. எந்த ஒருவினையும் செய்யப் புகுமுன் அந்த மூசிக வாகனனைப் பணிந்து போற்றினால் வெற்றி உறுதி. ஏழைகட்கு இரங்கும் ஏரம்பன், ஏழைப் பங்காளன் என்றெல்லாம் பிள்ளையாரைத் தொழுது பேறுகள் பெறுவோம்.*

2. பொங்கும் வயிரத்திண் தூணன்ன துதிக்கையும்
புடையிரண்டின் பூரித்த வெண்கோட் டுக்கூர்
தங்கும் தகவுடைய தண்ணளிபாய் கண்மலரும்
வாரணத்தின் மணிவயிறும் வடிவாய்த் தோன்ற
எங்கும் நிறைந்தபரம் பொருளான ஏரம்ப
நாயகனே! தரணியெலாம் போற்றி வாழ்த்தும்
அங்கக் கரிமுகத்து அருமகவே! ஆளும்சீர்
தஞ்சைப் பெருவுடையார் காப்பு நீயே!

*கருத்துரை : -*

*ஒளிவீசும் வயிரத்தூண் போன்ற உறுதியான துதிக்கையையும், அதன் இருபுறத்திலும் தெளிந்த வெண்ணிறக் கூர்மையான தந்தங்களையும், கருணைபொழியும் கண்களாகிய மலர்களையும், யானைக்கு அமைந்ததைப் போன்ற பருத்த அழகான வயிற்றினையும் கொண்ட வடிவத்துடன் எங்கும் நிறைந்து விளங்கும் ஏரம்பனே! உலகே வாழ்த்தி வணங்குகின்ற யானை முகத்துடன் அமைந்துள்ள மூத்த பிள்ளையே! உலகாளும் சீர்கொண்ட தஞ்சாவூர்ப் பெருவுடையார்க்குக் காப்பு நீதான்.*

*"துங்கக் கரிமுகத்துத் தூமணியே! நீ எனக்குச் சங்கத் தமிழ் மூன்றும் தா" என்று பூவுலகமே போற்றிடும் ஒருமுகக் கடவுள் அவனே கரிமுகக் கடவுள் கணநாதன். அவனை வாழ்த்தித் தொடங்குவோர் அவனியில் சிறப்படைவர்.*

3. மண்ணுலகின் சீர்காக்க மாணிக்க வாசகர்க்காய்
மண்சுமந்த தேவன் நீயே!
கண்ணுனக்குத் தந்ததனால் காளத்தி எழுந்தருளிக்
கண்ணப்பர் ஆக்கி னாயே!
பெண்ணுலகில் இணையாகப் பெருமைகள் படைத்திடவே
பெரும்பாதி வழங்கி னாயே!
தண்ணுமையாள் விடையேற்றித் தஞ்சாவூர் விரைந்தருளிப்
பெருவுடையார் காக்க நீயே!

*கருத்துரை : -*

*இந்த நிலவுலகத்தின் சிறப்பைக் காக்கவும், மாணிக்கவாசகரின் பெருமையை உலகுக்கு உணர்த்த நரிகளைப் பரிகளாக்கி, வைகைநதி வெள்ளத்தை அடைக்கப் பிட்டுக்கு மண் சுமந்து, பிரம்படியும் பட்ட பெருமான் நீ! திருக்காளத்தியில் திண்ணன் என்னும் வேடனின் மாசற்ற பக்தியால் தன் கண்ணைப் பிடுங்கி உனக்குப் பொருத்தியதால் உடனே காட்சி தந்து கண்ணப்ப நாயனாராக மாற்றிய மகேசன் நீ! ஆணுக்குப் பெண் இளைத்தவரல்லர் என்னும் இணை விதியை உணர்த்திப் பெண்ணின் பெருமை காக்க உடலின் பாதி வழங்கிய பரமன் நீ! குளிர்ச்சி பொருந்திய கண்களை உடைய உமாமகேசுவரியைக் காளை வாகனத்தில் உன்னுடன் அமரச் செய்து தஞ்சாவூருக்கு விரைந்து எழுந்தருளிப் பிரகதீசனுக்குக் காப்பாக இருப்பாயாக!*

*தம்மைக் காப்பவர் தாமே என்ற கொள்கைப்படி இறைவனே இறைவனுக்குக் காப்பு. மனிதன் கடவுளுக்குச் சொன்னதாகக் கூறப்படும் திருவாசகம் கேட்டு மகிழ மாணிக்கவாசகர்க்காய் மண் சுமந்த தெய்வம் எம் பெருவுடையார். அவர் அன்பு பெற நம்மை நாம் சுமக்க வேண்டும். நம்மில் சிவத்தைச் சுமக்க வேண்டும்.*

4. **சத்தியாய்ச் சிவமும் ஆகி ஏனைத்**
**தகவுடை அயனும் அரனும் ஆகி**
**முத்திவாய் முனைகும் முனிவர் ஆகி**
**மோகமுள் தைக்க நாளும் உன்றன்**
**பத்திவாய் தேடும் பக்த ராகிப்**
**பகலிராப் போது மாகி யாவும்**
**சித்திவாய் வகுத்த சக்தியே அம்மா!**
**சிவனார்க்கும் தஞ்சையில் காப்பு நீயே!**

*கருத்துரை :-*

*சக்தியாகச் சிவமாகப் பிரம்மனாகத் திருமாலாக, முத்திதேடி மந்திரம் சொல்லும் முனிவராக, மோகத்தில் திளைத்துத் தவிக்கும் பக்தகோடிகளாகப் பகல் இரவு என யாவுமாக நின்று சித்திபெறும் வழியினைக் காட்டும் ஆதிபராசத்தி தாயே! தஞ்சாவூர்ப் பிரகதீசப் பெருமானுக் காப்பாக இருக்கவேண்டும்.*

*அன்னை பராசக்தியே அனைத்திலும் ஊடுருவியுள்ள அருஞ்சக்தியாக இருக்கின்றாள். இரவாகவும் பகலாகவும் இருப்பவளும் அவளே. அன்னபூரணியாய் ஆண்டவனையே காத்தவள்; அகிலத்தையும் காக்கிறாள்.*

*தஞ்சையிலே குடிகொண்டு தரணியாளும் பெருவுடையார் உடனிருக்கும் பெரியநாயகியாகிய தாயே பராசக்தி. அவள் என்றும் எம்பெருமானுக்குத் துணையாகவும், காப்பாகவும் இருப்பாள்.*

5. பொருளுதவி நாடி வருமடியார் கோடி
பூமனத்தோய் பழநியப்பா!
பிரணவத்தைக் கேட்டுப் பிறைமுடியாற் கோதும்
பெரும்பொருளே சாமி நாதா!
அருணகிரி பாடும் திருப்புகழை நாடும்
அழகுவடி வேலா! செந்தூர்த்
திருக்குமர வேளே! திருத்தணிகை தேவே!
பெருவுடையார் காப்பு நீயே!

*கருத்துரை : -*

*பூப்போன்ற மென்மையான உள்ளம் கொண்ட பழநிமலை வேலனே! வாழ்க்கைக்குப் பொருள் வேண்டி நாளும் உன்னை நாடிவரும் அடியவர்கள் கோடிக்கணக்கானவர்கள் பிரணவப் பொருளறிந்து பிறையணிந்த பெருமானாகிய சிவனார்க்கு எடுத்துரைத்த சாமிநாதனே! அருணகிரிநாதர் பாடிய திருப்புகழை விரும்பிக் கேட்டு மகிழ்ந்த அழகிய வடிவேலனே! திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள திருக்குமரனே! திருத்தணிகை தேவனே! தஞ்சைப் பெருவுடையார்க்குக் காப்பு நீயே!*

*மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை என்நோற்றான் கொல் எனும் சொல் என்ற நெறிப்படி தந்தையர் பெருமையுறப் பிள்ளைகள் திறம் பெற்றவராகத் திகழ வேண்டும்.*

*முதியோர் இல்லங்களை மூடும் அளவிற்குப் பிள்ளைகள் பெற்றோர் மீது பாசமும் பாதுகாக்கும் உணர்வும் கொண்டவராக அமைந்தால் அகிலம் செழிக்கும் என்பதில் ஐயமில்லை.*

6. கன்றுளே நினைந்து கனிந்தி ரங்கும்
காராம் பசுவின் கருணை யேபோல்
மன்றுளே பயின்று மனமி ரங்கும்
மதிநீர்ச் சடையார் தஞ்சைப் பேரூர்
நின்றுளே இயக்கி நிலம்பு ரக்கும்
பிரகதீ சுவரர் பெருஞ்சீர் போற்ற
வென்றுளே யிருந்து விளங்க நல்கும்
வெற்றியும் தருந்திரு மாலின் காப்பே!

*கருத்துரை : -*

*தன் கன்றினை நினைந்து பரிவுடன மனமுருகும் கருமை கலந்த உடல் தோற்றமுடய தாய்ப்பசுவின் கருணையைப்போல, அம்பலத்தே ஆடிக் கருணை பொழியும் இறைவன் நிலவையும் கங்கை நதியையும் அணிந்த சடைமுடி உடையவராய்த் தஞ்சாவூரில் பிரகதீசுவரராய் எழுந்தருளி உலகைக் காத்து வருகிறார். யாவருடைய உள்ளத்திலும் என்றும் இருந்து நல்லனவற்றையே வழங்கிக் கொண்டுள்ள திருமாலின் திருவருளே தஞ்சைப்பெருவுடையார்க்குப் பெருங்காப்பாக அமைய வேண்டும்*

*இழந்த கன்றினை எண்ணிக் கண்ணீர்ப் பெருக்குடன் ஆராய்ச்சி மணியடித்து ஆண்டவனிடம் நீதி கேட்ட ஆவினம் வாழ்ந்த நாட்டில் ஆறறிவு கொண்ட நாம் எதையும் இழந்துவிடாமல் பெற்றுக்கொள்ள ஆண்டவனை நாடுவது இன்றியமையாததாகும்.*

*தஞ்சைப் பெருவுடைய நாதர் வேண்டிய வரங்கள் தந்தருளக் காத்திருக்கின்றார்.*

7. வாழ்வற்றுப் பிழைப்புக்கு வழி தேடி யலைந்துதினம்
வறுமையில் துன்ப முந்நீர்
மூழ்குற்றுக் கிடக்கின்ற முன்னேற மறுக்கின்ற
முடக்கநிலை மக்கட் கெல்லாம்
கூழ்கொண்டு கொடுத்தங்குக் குடிக்கின்ற வழிகாட்டும்
கொன்றைமலர் ஈச னாட
யாழ்கொண்டு சாமகீத இசைமீட்டித் துணைபுரியும்
நான்முக! காப்பு நீயே!

*கருத்துரை : -*

*நாளும் பிழைப்புக்கு வழிதேடி அலைந்து வறுமையெனும் துன்பக் கடலில் மூழ்கியே கிடந்து உழைத்து முன்னேற மறுத்து முடங்கிக் கிடக்கும் மக்களுக்கெல்லாம் உணவும் கொடுத்து உண்ணுகின்ற முறைக்கும் வழிகாட்டுகின்ற கொன்றை மலரணிந்த சிவபெருமான் நடனமாடச், சிறந்த யாழினைக் கொண்டு சாமகீதம் என்னும் இசைமீட்டி மகிழ்ச்சி கொள்கின்ற நான்முகக் கடவுளே! நீர் எம் பிரகதீசப் பெருமானாகிய பிள்ளைக்குக் காப்பாக எப்போதும் இருப்பீராக!*

*உழைத்து முன்னேற விழையார் நாட்டிற்குதவார்; மூலையில் முடங்கிக் கிடக்கும் நிலையை மாற்றி உறுதியுடன் உழைத்துயர வேண்டும்.*

*'உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ' 'கடின உழைப்பிற்கு ஈடு இணையில்லை' என்ற தொடர்கள் உழைப்பின் மேன்மையை உணர்த்துகின்றன.*

8. நறைக்கமல மேலமர்ந்து மாந்தர் நாவில்
நடம்புரியும் நற்றமிழை நல்கும் தேவி!
சிறைக்கொருவா லுறத்திரியும் செங்கா லன்னப்
பெடைக்குலத்தோ டுறவுலவும் சேவ லொப்ப
மறைக்கொருசீர் மன்னவன்நான் முகனார் கூழும்
மலரவளே! தஞ்சையிலே வீற்றி ருக்கும்
கறைக் கண்டன் பெருவுடையார் கழற்சீர் ஓங்கக்
கலைமகளே! தமிழ்த்தாயே! காப்பு நீயே!

*கருத்துரை : -*

*தேன் சிந்தும் தாமரை மலரில் அமர்ந்து மக்களுக்கு நற்றமிழை வழங்கும் கலைமகளே! வெண்மையான சிறகுகளோடு சிவந்த கால்களையுடைய பெண் அன்னத்துடன் சேர்ந்து மகிழ்ச்சியில் உலவுகின்ற ஆண் அன்னத்தைப் போன்று வேத நாயகனாகிய நான்முகனார் சேர்ந்திருக்கத் திகழும் மலர்மகளே! கலைமகளே! தஞ்சாவூரில் எழுந்தருளியிருக்கும் நீலகண்டனாம் பெருவுடையாரின் திருவடிப் பெருமைகள் மென்மேலும் சிறக்கத் தமிழ்மகளே காப்பாயாக!*

*ஆண் பெண் எனப் பறவைகள் அன்புடன் வாழினும் அடுத்தவற்றின் வாழ்வைக் கெடுப்பதில்லை; ஆண்டவனார் தம் தேவியுடன் கூடியிருப்பினும் அகிலத்தை மறப்பதில்லை. மானிடரும் மற்றவர் மனத்தைப் புரிந்து வாழ்ந்தால் மனித நேயம் தழைத்தோங்கும்.*

9. வேற்கரத் தாற்பகைவர் வீழ்த்தும் வலியார்க்கும்
வேதங்கள் ஆதி யான
நூற்பொருள் அறிந்தார்க்கும் நோக உழைப்பார்க்கும்
நுண்ணியசீர் செல்வ மீயும்
பாற்கடல் நாயகியே! பரந்தாமன் தேவதையே!
பார்மீது பாசம் கொண்ட
தாற்பரம் பொருள்தஞ்சைப் பெருவுடை யார்புகழ்
தழைத்தோங்கக் காப்பு நீயே!

*கருத்துரை : -*

*வேலேந்திய கரத்தால் பகைவரை வீழ்த்தும் வலிமைமிக்க வீரர்கள், வேந்தர்கள் போன்றோர்க்கும், நான்கு மறைகள் முதலான பல நல்ல நூல்களைக் கற்றறிந்தார்க்கும், உடல் வருந்த உழைப்பவர்க்கும், பல்வேறு வகையான சிறந்த செல்வங்களை வழங்கும் பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் திருமகளே! பரந்தாமனின் தேவியே! இவ்வுலக உயிர்கள் மீது நீயும் அன்பு கொண்டிருப்பதால் உலகுபுரக்கும் தஞ்சைப் பெருவுடையார்க்குக் காப்பாக இருப்பாயாக!.*

*விற்போர்க்கு உரிய வீரர்க்கும், கற்போர்க்கு உரிய தேவைக்கும், நெற்போர் மலிய உழைப்பார்க்கும், ஏனைத் தொழில் வல்லோர்க்கும் செல்வம் வழங்குபவள் திருமகள்; செல்வத்தை வழங்கிக் காத்தல் தொழிலைச் செய்பவன் திருமால்; திருமாலின் மூலக்கடவுள் சிவன்.*

10. இளமந்தி கிளைதாவ ஓங்கி நிற்கும்
மரம்யாவும் கரைமேவும் தஞ்சை யூரின்
வளமங்கி மறையாமல் காய்த்துச் செந்நெல்
கதிர்வீசப் புனல்வீசும் பொன்னித் தாயே!
திருநந்தித் தேவனாரும் பார்த்தி ருக்கத்
தேவர்களும் முனிவர்களும் காத்தி ருக்கப்
பெரும்பிள்ளைத் தஞ்சைவளர் பிரக தீசன்
பேரருளைக் கொடைவழங்கக் காப்பு நீயே!

*கருத்துரை : -*

*இளமையான குரங்குகள் தம் பெற்றோருடன் தாவி விளையாடும் கிளைகளையுடைய ஓங்கியுயர்ந்த மரங்கள் காவிரிக் கரைகளில் நிறைந்திருக்கும் வயல்களில் வளம் சற்றும் குறையாமல் நெற்கதிரை விளைவிக்கும் நீர்வளத்தை வழங்குகின்ற காவிரித்தாயே! நீ, தஞ்சாவூரில் நந்தித் தேவரும், தேவர்களும், முனிவர்களும் வாழ்த்தி வணங்கக் காத்திருக்கும் பெரிய கோவிலில் பிரகதீசப் பெருமான் அள்ளி வழங்கும் அருட்கொடைக்குப் பெருங்காப்பாக இருப்பாயாக!.*

*காவிரித்தாய் கரையிரண்டும் செழிக்கச் செல்வங்களை வாரி வழங்குபவள்; கரைகளைப் பேணி இயற்கைச் செல்வங்களைக் குறைவின்றிப் பெறப் பாடுபடுவோம்.*

11. பால்வளர் திருமுகச் சம்பந்த னின்மொழி
பயின்றிடும் போதுணர் வெழுந்தே
மேல்வரும் பாலகன் தான்சுமந் தோங்கிய
தாண்டக வேந்தரும் முறையே
நூல்தரும் தோழராய் நுவலரும் சுந்தரர்
மாணிக்க வாசகர் எனவே
நால்வரும் தஞ்சை நலந்தரு பெரிய
நாயகன் காக்க இணைந்தே !

*கருத்துரை :-*

*பால்மணம் மாறாப் பச்சிளங் குழந்தைப் பருவத்திலேயே பாடல்கள் பாடும் தெய்வக் குழந்தையாம் திருஞானசம்பந்தரின் பெருமைகளைக் கேட்டறிந்த திருநாவுக்கரசர், திருமறைக்காடு செல்லும் சம்பந்தரின் பல்லக்கினைத் தோளிலேந்திய பெருமை பெற்றவர். எம்பெருமான் தம் தோழராய் ஆட்கொண்டு தமிழ்ப்பணியாற்றச் செய்து தம்பிரான் தோழர் என்ற திருப் பெயர் பெற்றுப் பெருமையடைந்தவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். திருப்பெருந்துறைப் பெருமானால் அருள் பெற்ற பெருந்தகை மாணிக்கவாசகர். இத்தகு சிறப்புமிக்க சமயக் குரவர்கள் நால்வரும் தஞ்சைப் பெருவுடையார்க்குக் காப்பாக இருப்பார்களாக!*

*தமிழ்ச் சான்றோரைத் தெய்வ அருள் காக்கும், தெய்வங்களைத் தமிழ்ச் சான்றோர் கவி அருள், புகழ்பாடும்.*

## 2. செங்கீரைப் பருவம்

12. இரவுடையார் எளிமைதனக் கிரங்கி டாமல்

ஈந்துமகிழ் வோரையும் தடுக்கும் நெஞ்சக்

கரவுடையார் காலமெலாம் சேர்த்து வைத்த

கடும்பொருளைப் பயனுறச்செய் கடவுள் கண்டத்

தரவுடையார் அஞ்சியபே ரமரர் பேண

ஆலத்தைத் தேக்கியவா றமைதி காத்துப்

பெருவுடையார் நெற்பொலியத் தஞ்சைப் பேரூர்ப்

பிள்ளையாய்ச் செங்கீரை யாடு வாயே!

*கருத்துரை : -*

*தம் வறுமையைப் போக்கப் பிறரிடம் கேட்டுப் பொருள் பெற்று வாழ்வோரின் எளிமையைக் கண்டு வருந்தாமல், அவர்களுக்குக் கொடுத்துதவுவோரையும் தடுக்கின்ற தீய நெஞ்சுடையவர்கள் பல காலம் முயன்று தமக்காக மட்டுமே சேர்த்து வைத்துள்ள செல்வத்தை முறையாகப் பயன்படுத்துமாறு செய்விக்கும் கடவுள், கழுத்திலே அரவுடன் ஆலகால விடத்தைத் தேக்கிவைத்து உலக அமைதி காத்து வருபவராகிய கடவுள் தஞ்சைப் பெருவுடையாரே! நெல்மலியப் பொலிந்து விளங்கும் தஞ்சாவூரில் எழுந்தருளியுள்ள பிரகதீசா! குழந்தையாய்ச் செங்கீரை ஆடுவாயாக!*

*இயன்றதைப் பிறருக்குக் கொடுக்க வேண்டும்; கொடுப்பவரைத் தடுக்கக் கூடாது; சேர்த்த செல்வத்தைப் பயனுள்ள முறையில் செலவழிக்க வேண்டும்.*

13. கற்பூர சுந்தரனே! கடம்பவன நாயகனே!

கசிந்துருகிக் கற்றார் நாவில்

சொற்பால மந்திரனே! சூரர்தம் வதைக்கெல்லாம்

சூத்திரனே! சூலம் கீண்டிப்

பொற்றாம ரைக்குளத்தைப் பூதலத்திற் கீந்தவனே!

தஞ்சையிலே வீற்றி ருக்கும்

பொற்பாத நம்பரனே! பொன்னிநதிக் காவலனே!

செங்கீரை யாட வாவே!

*கருத்துரை :-*

*அழகும் மணமும் மிக்க பிரகதீசப் பெருமானே! கடம்ப மரங்கள் நிறைந்த வனங்கட்கும் சோலைகட்கும் தலைவனே! உன்னை எண்ணிக் கசிந்துருகி வணங்கக் கற்றவர் நாவிற்குக் கவிபாடும் திறத்தை வழங்கிய மாயனே! அசுரர்களின் அழிவுக்கெல்லாம் அடிப்படைக் காரணமாய் அமைபவனே! பெருநதிகள் தோன்றுமுன்பே மதுரையம்பதியில் சோமசுந்தரக் கடவுளைத் திருமஞ்சனம் செய்ய நீர்வேண்டித் தேவகணங்கள் வேண்ட இறைவன் தம் சூலத்தால் நிலத்தில் ஆழ்த்திக் கீண்டக் கடல் நீர் மேல்வரக் கங்கை நீரைத் தெளித்துப் புண்ணியமாக்கிய தடாகமே பொற்றாமரைக் குளமாகும். அதனைப் பூவுலகிற் கீந்தவனே!*

*தஞ்சாவூரில் எழுந்தருளியுள்ள பொற்பாதங்களைக் கொண்ட பரம்பொருளே! காவிரி நதியின் காவலனே! நின் பிஞ்சுக் கரங்களால் செங்கீரை ஆடுகவே!*

*அசுரக் குணம் கொண்ட மானிடரின் மன இயல்புகளைச் செம்மைப் படுத்துபவன் சிவன். தஞ்சாவூரில் உள்ள பெருவுடையார் சன்னதிக்குச் சென்று மீண்டாலே தீமையினின்று விடுபட்டுத் தெளிவு கிடைக்க வழியுண்டாகும்.*

14. கற்றவைக்கும் எட்டாத காவியப் பொருளே!

கனியவைக்கும் காதலினால் கசியச் செய்து

பற்றவைக்கும் பரிவகற்றும் பாங்கு தந்து

பண்பலைகள் வீசிநிற்கும் பரமன் வைவேல்

கொற்றவைக்கும் நாயகனே! தஞ்சா வூரில்

கொட்டிவைத்த பேரழகில் கோயில் கொண்டு

சுற்றவைக்கும் உட்புறத்தில் பிரக தீசா!

செங்கரத்தாற் செங்கீரை யாட வாவே!

கருத்துரை : -

கற்ற கல்வியாலும், பெற்ற பட்டங்களாலும் அறிய முடியாத காவியப் பொருளாகிய பெருமானே ! உன் மீது அன்பு கொண்டு உருகச் செய்து உலக ஆசைகளிலிருந்து விலகுகின்ற மனப் பான்மையைத் தந்து நற்பண்புகளை வழங்கும் பரமனே! கூரிய வேலைக்கையில் கொண்ட கொற்றவையாம் தேவியின் தலைவனே! நிறைந்த அழகோடு பக்தர்கள் சுற்றி வந்து வணங்கும் உட்புறத்தோடு தஞ்சாவூரில் கோயில் கொண்ட பிரகதீசனே! நின் சிவந்த கரங்களால் செங்கீரை ஆடி விளையாடுகவே!

கல்வியால் கடவுளை எட்ட இயலாது, கருத்தினில் உலகப் பற்றுக்களை நீக்கி உளத்தூய்மையுடன் இறையருள் தேட வேண்டும். கல்வி கற்றவர்கள் பொருளீட்டத் தம் கல்வியினைப் பயன்படுத்தலாம். ஆன்மீகப் பாதையில் அவர்கள் செல்ல வேண்டுமானால் தூய சிந்தனையும் இறைவன் மீது இடைவிடாத அன்பும் வேண்டும்.

15. பூச்சற்ற பொன்னிறத்துக் கோயில் கொண்ட
பொன்மேனிப் பிரகதீசப் பிள்ளாய்!
ஏச்சற்ற ஏழையர்க்கு மனமி ரங்கி
எண்ணத்துத் தூய்மையிலா வெட்டிப்
பேச்சற்று விறுவிறுப்பாய் வாழத் தூண்டும்
பெருமைமிகு பேறுகளைப் பேணித்
தீச்சுற்றும் நுதல்விழியால் தேசம் காக்கும்
தெள்ளமுதே செங்கீரை யாடே!

*கருத்துரை :-*

*எந்தவிதப் புது வண்ண வேலைப்பாடுகளும் ஏற்றுக் கொள்ளாமல் பொன்மயமான தோற்றத்தில் தஞ்சைப் பெரிய கோயிலாய் எழுந்து நிற்கும் கோயிலில் பொன் மேனியுடன் வீற்றிருக்கும் பிரகதீசப் பெருமானாகிய பிள்ளையே! பழிச்சொல் ஏதுமின்றி வாழும் மாந்தர் தூய எண்ணத்தோடு வீண் பேச்சின்றி விறுவிறுப்பாக வாழ மனமிரங்கி அருள் புரியும் இறைவா! சுடர் வீசும் நெற்றிக் கண்ணால் எமக்குப் பல பேறுகளை வழங்கி நாட்டைக் காக்கும் பரம்பொருளே! எம் தெளிந்த அமுதம் போன்றவனே! செங்கீரை ஆடுகவே!*

*நாட்டின் மாநில மற்றும் நடுவண் அரசுகள் வண்ண வேலைப்பாட்டுடன் தஞ்சைப் பெரிய கோயிலைப் புதுப்பிக்க நினைத்த போதெல்லாம் அதனை ஏற்றுக் கொள்ளாமல் பழமைச் சிறப்போடு பெருமை காத்து நிமிர்ந்து நின்று நமக்குப் பல பேறுகளைத் தருகின்றது தஞ்சைப் பெரிய கோவில்.*

16. தேவாதி தேவர்க்குத் தெள்ளமுதம் வாய்க்கத்
திருநீல கண்டனாய்த் தெரிய நின்றாய்!
மூவாதி ருக்கோலம் முன்தோன்றக் காட்டில்
முழுமேனி வெண்ணீறு பூசி நின்றாய்!
காவாதி ருப்போர்க்குக் காட்டியருள் கூட்டக்
காளத்தி மீதமர்ந்து கண்ணீர் விட்டாய்!
சாவாதி ருந்துபல சாதனையாம் காட்டச்
சங்கரனே! செங்கீரை யாட வாவே!

*கருத்துரை : -*

*இறைவனே! தேவர்களுக்கு அமுதம் கிடைக்க வேண்டி ஆலகால விடத்தை ஏற்றுக் கொண்டு ஆலம் தேங்கிய கழுத்துடன் திருநீலகண்டனாய்க் காட்சி தந்தாய்; மூதாட்டியாகிய காரைக்கால் அம்மையார்க்குக் காட்சி தரத் திருவாலங்காட்டில் உடல் முழுவதும் சாம்பலைப் பூசித் திருநடனம் செய்தாய்; பக்தியின் மேன்மை பேணாதவர்க்கு, மெய்ப்பித்துக் காட்டத் திருக்காளத்தியிலே நின்கண்களில் செந்நீர் வரச்செய்து கண்ணப்பரின் பக்தியை உலகுக்குக் காட்டினாய்; அத்தகைய உனக்கு யான் சாவாமல் இருந்து பல தொண்டுகளைச் செய்து சிறக்கும் நிலை கொடுத்துத் தஞ்சாவூர்ச் சங்கரனே! செங்கீரை யாடுவாயாக!*

*பிரகதீசன் பிறிதின்நோய் தன்னோய் போல் போற்றுபவன்; பக்தரின் அழைப்புக்குப் பணிந்தோடி வருபவன்; உறுப்பு மாற்றுச் சிகிச்சை முறையைக் கண்ணப்பர் வாயிலாக உலகுக்கு அறிமுகப் படுத்தியவன்; சாவா வரமளிப்பவன்.*

17. வருபெண்ணை பாலாறு வைகைஎழில் பொருநையொடு
வளர்பொன்னி நதியைந்தும் பாய்ந்திந்தத்
திருமண்ணை வளங்கூட்டப் புனலாகி நின்றாயைத்
தினம்பாடும் எளியார்க்கும் எளியராகி,
ஒருபெண்ணை உடலேந்தி மறுபெண்ணைச் சிரமேந்தி
உலகாளும் கரமேந்தி ஓங்குதஞ்சைப்
பெருமண்ணில் குடிகொண்ட பிரகதீசா! பெயர்விளங்கப்
பிஞ்சுவிரல் செங்கீரை யாடியருளே!

*கருத்துரை :-*

*தென்பெண்ணை, பாலாறு, வைகை, பொருநை, காவிரி என்னும் நதிகள் ஐந்தும் பாய்ந்து இந்தத் தமிழகத்தை வளமிக்க நாடாக்க அந்நதிகளில் தண்ணீராய்த் திகழும் இறைவா! நின்னை நாளும் போற்றுகின்ற அடியவர்களுக்கும் அடியவராகத் திகழ்ந்தவன் நீ, உடலில் பாதி தந்து ஒரு பெண்ணையும் தலையிலே கங்காதேவியெனும் மற்றொரு பெண்ணையும் தாங்கிப் புகழ்விளங்கும் தஞ்சாவூரில் வீற்றிருந்து எம்மைக் காக்கும் பிரகதீசப் பெருமானே! தஞ்சைப் பகுதியின் சிறப்பு மேன்மேலும் உயர மென்மையான கரங்களால் செங்கீரையாடி அருள்வாயாக!*

*வற்றாத ஜீவநதிகள் வற்றாமல் அருள்புரியும் இறைவன். கெட்டார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் இல்லை மழை என்ற நிலையை மாற்றி நல்லாரைப் பெருக்கி மழைவளம் கூட்டி, மனமிரங்கி அருள் மழை பொழிபவன் இறைவன்.*

18. தொண்டர்சீர் பரவுவார் தூயநூல் படைத்தற்காய்

தொன்னெறியோ டுலகெலாம் என்றெடுத் தோதினாய்!

மண்டுபேர் அறமெலாம் மாநிலம் தழைத்தற்காய்

மாதமும் மாரிதந்து மன்னர்சீர் பேணினாய்!

அண்டர்கோன் இந்திரன் ஆணவம் தணித்தற்காய்

ஆனையான் திருமுன்னர் அடிபணிய ஏகினாய்!

கொண்டல்சூழ் தஞ்சையில் கோயில்கொண் டருளற்காய்

கொன்றையம் மலர்மன்னா செங்கீரை ஆடுவாய்!

*கருத்துரை :*

*கொன்றை மலர்களைச் சூடிய இறைவா! நீ, அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாற்றைப் பாடமுற்பட்ட சேக்கிழார்க்கு உலகெலாம் என்று அடியெடுத்துக் கொடுத்தாய்! பல தர்மங்களும் நிறைந்து இப்பெருநிலம் செழிக்கத் திங்கள் தோறும் மூன்று முறை மழைபெய்யச் செய்து இந்நாட்டு மன்னர்களின் சிறப்பைக் காப்பாற்றினாய்! தேவர்களின் தலைவன் இந்திரனின் ஆணவம் போக்க ஆனைமுகனைப் பணிந்து வணங்கச் செய்தாய்! மழைவளத்தால் நீர்வளம் நிறைந்த தஞ்சையிலே கோயில் கொண்டு எப்போதும் அடியவர்க்கு அருள்பொழியச் செங்கீரை ஆடுவாயாக!*

*ஆணவம் தலைக்கேறினால் அகிலத்திற்காகாது. அயனாயினும், அரியாயினும், அமரராயினும் சிவத்தைப் பணிதல் சிறப்பு. அவர்க்கே அந்நிலையெனில் மானிடர்க்கு எள்ளளவும் இறுமாப்பு இருத்தலாகாது.*

*தெரிந்திருக்க வேண்டும். தாம் பெற்ற பொருளில் சிலவேனும் பிறருக்குப் பகிர்ந்தளிக்கத் தெரிந்து கொள்ளல் சமுதாய நலம் பயக்கும்.*

19. கற்றது விரித்துரையக் கல்லாதார் தம்கரத்தே
கவிதைகள் கிடைத்தாற் போன்றும்,
பெற்றது பகுத்தளிக்கச் சொல்லாதார் தம்அகத்தே
பெரும்பொருள் குவிந்தாற் போன்றும்,
நற்றவ நாதா!நின் நறும்புகழைப் பாடாமல்
பெருந்திரள் மாக்கள் பல்லோர்
சுற்றிலும் சூழ்ந்திருக்கச் சுயநிதிமா மதிவழங்கச்
செங்கீரை தன்னில் ஆடே!

*கருத்துரை : -*

*தாம் கற்றவற்றைப் பிறருக்குத் தெளிவாக விளக்கிக் கூறத் தெரியாதவரிடம் பல செய்யுள் நூல்கள் கிடைத்தாற் போலவும், தாம் பெற்றுள்ள மிகுதியான பொருளைப் பிறருக்குச் சிறிதளவேனும் பகுத்துக் கொடுக்கச் சொல்லாதார் வீடுகளில் மிகுதியான பொருள் குவிந்து கிடந்தாற் போலவும், இறைவனின் பெரும்புகழைப் பேசாதவர்களும் பாடாதவர்களும் விலங்குகளைப் போல் சூழ்ந்திருக்கின்றனர். தஞ்சைப் பெருவுடையார் பெருமானே! அவர்களுக்குகெல்லாம் நல்ல அறிவைச் செல்வமாக வழங்கியருளச் செங்கீரை யாடுகவே!*

*தாம் கற்றவற்றைப் பிறரும் அறியும் வகையில் விளக்கிக் கூறத் தெரிந்திருக்க வேண்டும். தாம் பெற்ற பொருளில் சிலவேனும் பிறருக்குப் பகிர்ந்தளிக்கத் தெரிந்து கொள்ளல் சமுதாய நலம் பயக்கும்.*

20. அப்பாகக் குளிர்கின்றாய் ஆனைக்கா தன்னில்

அனைத்துயிர்க்கும் வளியானாய் திருக்கா ளத்தி,

வெப்பாகத் திருவண்ணா மலையில் நின்றாய்

வெளியாகத் தில்லையம் பதியில் நின்றாய்

தப்பாமல் தரணிதொழும் காஞ்சி தன்னைத்,

தஞ்சையெனும் பதியிங்கே ஐந்தி னுக்கும்

ஒப்பான திருத்தலமென் றுணர்த்த வேண்டி

ஒளிக்கரத்தால் செங்கீரை யாடு வாயே!

*கருத்துரை : -*

*பஞ்சபூதக் கடவுளாகக் குளிர்ந்த நீராய்த் திருவானைக் காவிலும், அனைத்துயிர்க்கும் தேவையான காற்றாகத் திருக்காளத்தியிலும், வெப்பம் வீசும் நெருப்பாகத் திருவண்ணாமலையிலும், ஆகாயமாகத் தில்லையாம் சிதம்பரத்திலும், தவறாமல் மாந்தர் வணங்கும் நிலமாகக் காஞ்சிபுரத்திலும் எழுந்தருளிப் புரந்து வரும் இறைவனே! ஆயினும் இந்த ஐந்து திருத்தலங்களுக்கும் ஒப்பான ஒரு தலமாகத் தஞ்சையை உலகுக்குணர்த்த வேண்டிப் பிரகதீசனாய் வீற்றிருக்கும் பெருமானே! நின் ஒளிக்கரத்தால் செங்கீரை ஆடுவாயாக!*

*பஞ்சபூதத் தலங்களுக்குச் சென்று பெறும் பயனைத் தஞ்சாவூர் வந்து பெருவுடையாரை வணங்கினாலே அடையலாம் என்பது தெளிவு.*

21. எழுத்துயிர்மெய் இரண்டின்வழி இயங்குமொழி இயலிசை
நாடகமாய் நின்றாற் போன்றும்,
பழுத்தகனி விழுந்திடினும் பயன்தருநற் சுவைநிறமும்
விதையுடனே கொண்டாற் போன்றும்,
அழுத்தமுடன் புதிர்வாழ்வை எதிர்நோக்கும் உள்ளத்தே
ஒளிந்திருக்கும் ஆல காலக்
கழுத்துடைய பிரகதீசா! காலத்தே நலம்வழங்கச்
செங்கீரை யாடு வாயே!

*கருத்துரை :-*

*உயிர் எழுத்து, மெய்யெழுத்து எனும் இரண்டின் அடிப்படையிலே மொழி இயல், இசை, நாடகம் என முப்பிரிவாய் இயங்குகின்றது. கனியொன்று பழுத்து மரம் விட்டு வீழ்ந்தாலும் பயனுள்ள சுவையும், நிறமும், விதையும் கொண்டுள்ளது. இவற்றைப் போன்று புதிரான வாழ்க்கையை நாளும் எதிர்பார்த்து அழுத்தமாக வாழ நினைப்போர் உள்ளத்தில் குடியிருக்கும் விடமுண்ட கழுத்துடைய பிரகதீசப் பெருமானே! உரிய காலத்தில் எமக்கு உரிய நலம் வழங்கச் செங்கீரை ஆடுவாயாக!*

*ஒன்றில் ஒன்று ஒளிந்திருப்பது உலகியற்கை. நம்முள் நாமும் நமக்குள் இறையருளும் இருப்பதனை உணர்ந்திடின் துன்பமில்லை.*

# 3. தாலப் பருவம்

22. பிறப்புக்கும் முன்னதாய்ப் பேரா னந்த
    வெள்ளத்தின் விளைவுதந்து விலகா வேந்தாய்
இறப்புக்கும் பின்னதாய் எளிமைக் கேங்கி
    இன்னற்குள் உழன்றிங்கு வாடும் பல்லோர்
சிறப்புக்கும் பொன்னதாய்ச் சிவமாய் நின்று
    செஞ்சடைமேல் நதிபாயச் செய்யுட் செந்நெல்
உறப்புக்கும் உழுவார்க்கே உரத்தை யீந்தும்
    உயர்கோவில் கொண்டனைதா லேதா லேலோ !

*கருத்துரை : -*

*மாணிடரின் பிறப்புக்கு முன்பே பேரானந்தத்தின் பயன்களை எல்லாம் உயர்த்தி அவர்களை விட்டு அகலாதவராய்த் திகழும் ஆண்டவனே! இறப்புக்குப் பிறகு இந்த ஆன்மா அடையும் நிலையை எண்ணிப் பெருந்துயரில் சுழன்று தவிக்கும் மக்கள் பலருடைய சிறப்புக்கும் காரணமாக நிற்கும் பெருந்தெய்வமே! பொன்மயமான மேனியுடன் சிவந்த சடையின் மீது நதியைத் தாங்கிச் சிவமாய்க் காட்சி தரும் இறைவா! நல்ல நிலத்தில் நெல் விளைந்து பெருகச் செய்யும் வலிமையை உழவர்களுக்கு வழங்கத் தஞ்சையிலே பெரிய கோயிலைக் கொண்ட பிரகதீசனே! சற்று நீ ஓய்வு கொள்ளக் கண்ணுறங்குவாயாக!*

*பிறப்பு இறப்புகட்கு அப்பாற்பட்டவன் பேசருந் தெய்வமாம் பிரகதீசன். அன்புக்குச் சிவமே சாட்சி எனச் சொல்லும் வகையில் தஞ்சையிலே குடிகொண்ட பெருமான் குடிமக்களிடத்தும் பேரருள் வழங்கிக் காத்து வருகிறார்.*

23. மஞ்சைப் போழ்ந்த மதியுலவு மாளிகையின்
மீதமர்ந்த மேலோன் வானோர்
நெஞ்சைப் போழ்ந்த நிலையுணர மாட்டாமல்
பூவமர்ந்தான் வேங்க டத்தான்
செஞ்சொல் அடங்க வடிவெடுத்தான் பெருவுடையான்
செவ்வியகங் கைச்சிர முடித்தான்
தஞ்சை சூழ்ந்த தண்ணுமையாள் பாகத்தான்
தலைவாதா லேதா லேலோ !

கருத்துரை : -

மேகத்தைப் பிளந்து உயர்ந்து நிற்கும் கோபுரத்தின் மீது நிலா உலவுகின்ற அழகு தோன்றும் தஞ்சைப் பெரிய கோயிலில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் தேவர்களின் நெஞ்சில் ஆழமான இடம் பிடித்துள்ளதை அறியாமல் பூவமர்ந்த நான்முகனும், வேங்கடமலையமர்ந்த திருமாலும் தத்தம் கருத்தைத் தவறென உணர்ந்து கொள்ளுமாறு பெருவடிவான விசுவரூபம் எடுத்தவர் சிவபெருமான். அவர் சிறப்புமிக்க கங்கை நதியைத் தலையிலும், உமா தேவியைத் தன் உடலிலும் தாங்கியவர். தஞ்சை சூழ்ந்த அனைத்துப் பகுதிகளையும் ஆளுகின்ற பிரகதீசனே! தலைவா! அயர்ந்து கண்ணுறங்குவாயாக!

தான் மட்டுமே எல்லாத் திறமையும் உடையவன் என்ற ஆணவம் ஆகாது. மற்றவரும் அனைத்துக் கலைகளையும் கற்றிருப்பர் என்ற எண்ணம் உடையவர் உலக அறிவு உடையவராவர். அயனுக்கும் அரிக்கும் இதனை உணர்த்தியவர் அரனாகிய சிவன். அவனை வழிபடின் அடக்கமெனும் பண்பு வளரும்.

24. புயலுலவு குழலோடும் பூவிதழின் மொழியோடும்

புவியுலவு காளையரின் புலனழியச் செயலுலவும்

கயலுலவு கண்ணாரின் கருத்துலவு மாத்திறத்துக்

கயிலமலை மேலவரே! கனிந்திரங்கி வந்திங்கு

வயலுலவு கதிர்விளங்கி வாழ்வுயரச் செய்தீரேல்

வண்டமிழர் மகிழ்வோங்கி வலம் வருவர் நிலம்ஒழுகும்

பெயலுலவச் சீருலவும் நீருலவப் பொருளுலவும்

பெருவுடையப் பேரரசே! தாலே தாலேலோ!

*கருத்துரை :-*

*மேகத்தைப் போன்ற கருமையான கூந்தலோடும், பூப்போன்ற மென்மையான இதழின் சுவை மிகுந்த மொழியோடும் நடமாடும் பெண்கள் இப்புவியில் திரிகின்ற காளைபோன்ற இளைஞர்களின் ஐம்புலன்களையும் செயலிழக்கச் செய்யும் மீன் போன்ற கண்களைப் பெற்றிருக்கின்றார்கள். இத்தகைய பெண்களின் சிந்தையிலும் இடம்பெற்றுக் கைலாய மலை மேலமர்ந்த கடவுளே! நீவிர் எம்மீது பரிவு கொண்டு தஞ்சைப் பகுதிக்கு வந்து வயல்களில் நெற்கதிர்கள் நிறைந்து விளங்கச் செய்து மக்கள் வாழ்க்கையில் வளம் கூட்டி உயர்வடையச் செய்தீரானால் தமிழர்கள் மகிழ்ச்சியில் திளைத்து உலகை வலம் வருவர். மழைவளம் பெருக, நிலம் குளிர்ந்து சிறப்படையும். நீர்வளம் பெருகப்பெருக மக்களின் பொருளாதார நிலை உயர்வு பெறும். இவைபோன்ற பேரருள் வழங்கும் பிரகதீசப் பெருமானே! பேரரசே! சற்றே கண்ணுறங்குவாயாக!*

*ஆண்களின் சிந்தையை அலைக்கழிக்கின்ற பெண்களின் இதயத்திலும் இறைவன் இடம் பிடித்துள்ளான். நீருயர நெல்லுயர்ந்து உழவர் தம் வாழ்வுயரப் பெருவுடையாரை வழிபடுவோம்.*

25. பரியெலா நரியெனத் தெரிவுற மாற்றிப்
பத்தியின் மேன்மையைக் காட்டிப்
பெருந்துறை மீதமர் பெம்மானு வந்து
தண்ணெனும் தஞ்சையில் நின்றே
திரிபுர மெரித்த விழிச்சுடர் வீசித்
தென்னகம் காக்கும் தேவே!
விரிசடைக் கடவுள் விடையமர் வேந்தே!
தலைவா! தாலேதா லேலோ!

*கருத்துரை : -*

*திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் எம்பெருமான், மாணிக்கவாசகரின் பக்தி வலிமையை உலகிற்குக் காட்ட நரிகளைப் பரிகளாக்கியும். பரிகளை நரிகளாக்கியும் அருள் புரிந்தார். அப்பெருமான், குளிர்ச்சி மிகுந்த தஞ்சையிலே மகிழ்ச்சியோடு எழுந்தருளியுள்ளார். முப்புரங்களை எரித்த நெற்றிக்கண் சுடரை வீசித் தென்னகத்தைக் காக்கக் காளை மீது அமர்ந்த செஞ்சடை நாதனே! தலைவனே கண்ணுறங்குவாயாக!*

*தூயபக்திக்குத் துணை நிற்பவன், தோடுடைய செவியன், பொன்னகம் கொண்ட புலித்தோலன், தென்னகம் காக்கும் தேவன், நம்மகம் காக்கும் நாயகன், தஞ்சைப் பெரியநாயகியோடமர்ந்த பெருவுடையாரே ! அந்தப் பெருவுடையாரின் திருவடியை நம்முடிசூடி நலமிக்க வாழ்வைப் பெறுவோம்.*

26. காதுலவு நோக்குடைய கயற்கெண்டை விழியுடனே
கடலுலவு பவளத்தின் கனியிதழின் சுவை கொண்ட
மாதுலவு மெழில்மீது மயல்கொண்டு கழித்திட்ட
மாப்பொழுது கருதியிடர் மலைமீது நிற்கின்ற
தீதுலவு மானிடரின் திறமாற்றிப் பூவுலகில்
தெளிந்தோங்கச்செயல்புரியும் தேன்கொன்றைச் செஞ்சடையின்
மீதுலவு பிறையோனே ! மெல்லியலாள் உமையாட்கு
மேன்மையினைத் தந்ததலை வா!தாலே தாலேலோ !

*கருத்துரை : -*

*காதளவும் பாய்கின்ற பார்வைகொண்ட மீன் போன்ற விழிகளையும், கடலில் கிடைக்கும் பவளத்தின் நிறத்தையுடைய இதழ்களையும், அவற்றின் கனிபோன்ற சுவையினையும் பெற்றுள்ள பெண்களின் அழகிலே ஈடுபட்டு மயங்கி இப்பூவுலக மாந்தர் கழித்த காலம் மிக அதிகம். மேலும் அச்சிற்றின்ப எண்ணத்திலேயே வாழ்ந்து துன்பமெனும் மலையுச்சியில் நிற்கின்ற தீயமனம் படைத்த மானிடரின் இவ்வியல்பை மாற்றித் தெளிவுறச் செய்து இப்புவியில் சிறந்த வாழ்வு வாழச் செய்யும் கொன்றை மலரணிந்த சிவந்த சடையில் நிலவினையும் அணிந்துள்ள இறைவனே! மென்மை கொண்ட உமாதேவிக்கு மேலான சிறப்புகளைத் தந்த தலைவனே! பெருவுடையார் பெருமானே! கண்ணுறங்குவாயாக!*

*சிற்றின்பம் விழைவார் பேரின்பம் பெறார்; சிவபார்வதி சமேதரைச் சிந்தையில் கொண்டால் பவகாரியம் நீங்கும்; பார்மிசை புகழ் ஓங்கும்; பெருவுடையாரின் நாமம், பேசப்பேசச் சேமம்.*

27. அரவின் வாய்திகழ் மணியின் ஒளியில்

உலவும் உயர்கிரி உரவோனே!

இரவின் வாய்திகழ் எளியோர் வெறுமை

இனிதே புரக்கும் கரத்தோனே!

பரவும் பிணியில் உழலும் பல்லோர்

பசியை அகற்றும் விழியோனே!

தரணிக் குணவைத் தருவோர் தஞ்சைத்

தலைவா! தாலே தாலேலோ!

கருத்துரை : -

படமெடுத்து ஆடும் நாகப்பாம்பின் உள்ளே இருக்கின்ற இரத்தினக் கல் வீசுகின்ற ஒளியின் உள்ளே ஊடுருவித்திகழும் இறைவனே! நீ உயர்ந்த மேரு எனும் இமயமலையிலும் அமர்ந்து உயிர்கட்கு வலிமையை வழங்குகின்றாய். வறுமையின் வாய்ப்பட்டுப் பிறரிடம் பொருள் பெற்று வாழும் எளியவரின் இல்லாமையை நீக்கி அவர்களுக்கு இன்பமான வாழ்வைத் தரும் அருட்கரங்களை உடையவனே! பரவுகின்ற பலவகையான நோய்களினால் துன்புறுகின்ற பலருடைய துன்பத்தையும், பசியையும் நீ நின் அருள் பார்வையால் அகற்றுகின்றாய். உலகுக்கே உணவுப் பொருள்களை வழங்கும் உழவர்கள் நிறைந்த தஞ்சாவூருக்குத் தலைவனே! கண்ணுறங்குவாயாக!

நீண்டநாள் வாழும் நாகப்பாம்பு இரவு நேரங்களில் ஒளிமிகுந்த இரத்தினக் கல்லை உமிழ்ந்து அந்த ஒளியில் தனக்குரிய உணவைத் தேடும் என்று கூறுவர். பிரகதீசனின் அருள் ஒளியில் நாமும் நம் வாழ்வைத் தேடுவோம்.

28. வான்மாட மீதமர்ந்து வண்ணநில வாட்சிசெயும்

வளர்மேரு வரையென்றும் வண்டமிழர் குடைமேவும்

தேன்நாட வண்டினங்கள் தேடிவந்து மலர்பாயும்

தெரிவையரின் செறிவினைப்போல் திருவைகை நதிபாயும்

நான்மாடக் கூடலிலே நாடறிய இவையாவும்

நடந்தேறச் செய்கின்ற நாயகனே! தஞ்சையிலே

மான்ஆடக் கைக்கொண்டு மதுரைபோல் நலம்விளைக்க

மனங்கனிவாய்க் கண்ணுறங்காய்! சீர்தாலே தாலேலோ!

கருத்துரை :-

*நான்மாடக் கூடலெனும் மதுரை மாநகரில் உள்ள உயர்ந்த மாடமாளிகைகளில் அழகான நிலவு தங்கி ஆட்சி செலுத்தும். உயர்ந்த இமயமலையானது எப்போதும் தமிழர்க்குக் குடைபிடிக்கும், தேன்நிறைந்த மலர்களைத் தேடிவரும் வண்டுகள் பாய்ந்து தேனை உண்ணும். இங்குள்ள மகளிரின் செறிந்த கற்பினைப் போல் பெருமிதத்துடன் அழகிய வைகை நதிபாயும் என்பன போன்ற இச்செயல்கள் உலகு போற்ற நிகழ்த்துகின்ற சோமசுந்தரக் கடவுளே! மதுரையிலே நீ புரியும் இந்த மகத்தான செயல்கள் போலத் தஞ்சாவூரிலும் சிறப்பாக நடைபெறச் செய்யும் கனிவான உள்ளத்துடன் மானைக் கையிலே ஏந்தியவாறே கண்ணுறங்குவாயாக!*

*நிலவு தங்குமளவிற்கு வான் முட்டும் மாடமாளிகைகள் கொண்ட தமிழகம் பண்டை நாளில் இருந்திருக்கிறது. தமிழர்களுக்கு இந்தியாவின் வடஎல்லையான இமயம் தலைவணங்கியிருக்கிறது. தமிழர்கள் இமயம் வரை ஆட்சி செய்ததும், வடவர் ஆட்சியை வரையறுப்பதும் அன்று முதல் இன்று வரை நடக்கிறது. மன்னர்தம் மனவலியும் மாதர் தம் கற்பு வலியும் கோலோச்சிய நாடும், பிரகதீசனின் பேரருள் நிறைந்த நாடும் நம் நாடு.*

29. வாள்சாயப் பகைநடுங்கும் வண்சோழர் மரபாண்ட
வயல்சூழும் தஞ்சை மண்ணில்
நாள்சாய நெல்விளைக்கும் நல்லுழவர் குடிவிளங்க
நாள்பலவாய் மழையே யின்றிக்
கோள்சாயப் பொய்த்துவரும் கொண்டலினம் கூட்டிவந்து
கொட்டுமழை காட்டி நிற்பாய்
தோள்சாயும் மடமாதர் துயர்போக்கும் இடம்தந்த
துணைவா!தா லேதா லேலோ !

*கருத்துரை : -*

*இறைவா! நீ, நின் தோள்சாயும் உமையாளின் ஏக்கத்தைப் போக்குதற்கு உடலிலே இடம் தந்து அர்த்தநாரீசுவரனாய்க் காட்சி தருகின்றாய். வாள்வீச்சினால் பகைவரை அஞ்சியோடச் செய்யும் ஆற்றலும் கொடைத் திறனும் கொண்ட சோழர்கள் ஆட்சி செய்த வயல்கள் சூழ்ந்த தஞ்சைப் பகுதியில் பொழுது சாயும் வரை உழவுத் தொழில் செய்து நெல்லை மிகுதியாக விளைவிக்கும் உழவர் பெருமக்களின் குடும்பங்கள் செழிக்க, நாள்கள் பலவாகவும், மாதங்கள் பலவாகவும் மழையில்லாமல் கோள்களின் ஆதிக்கத்தினால் ஏற்படும் இயற்கை மாற்றங்களால் திசைமாறிப் போன மேகக் கூட்டங்களையெல்லாம் அழைத்து வந்து மழையைக் கொட்டச் செய்வாய்! எம் துயர் போக்கும் பிரகதீசனே! சற்றே நீ கண்ணயர்வாயாக!*

*படைத்திறமும் கொடைத்திறமும் பாராளும் வேந்தர்க்கு வேண்டும்; கொடைத்திறமின்றிப் படைத்திறத்தால் மட்டுமே நாடாளுவோர்க்கு மக்கள் ஒரு நாள் பாடம் கற்பிப்பர்.*

30. இம்மை மறுமையிடர் எமையடர்ந்த போழ்தினிலும்

இருகை கால்களையும் இழக்குநிலை ஏற்படினும்

வெம்மை நரகடைந்து விழுக்கும் வேளையிலும்

அப்பரைப்போல் நரைபழுத்த அகவைவந்த காலையிலும்

அம்மை அருகமர்ந்த அய்யன்நினை வகலாமல்

அருந்தமிழ்ப் பாவியற்றும் ஆற்றல்தர வேண்டுமய்யா!

மும்மைப் புரமெரித்த முழுமுதல்வா! முடிவில்லா

முக்கட் பரம்பொருளே! சீர்தாலே தாலேலோ!

*கருத்துரை : -*

*முடிவேயில்லாத முக்கண் கடவுளே! இம்மையிலும், மறுமையிலும் துன்பங்கள் மிகுந்து எம்மை வாட்டி வதைக்க நேர்ந்தாலும், இரண்டு கை, கால்களை இழக்குநிலை நேர்ந்தாலும், கொடுமை மிகுந்த நரகத்தை அடையும் நிலை ஏற்பட்டு வீடுபேறு அடைய முடியாமல் போனாலும், உனக்குத் தொண்டு செய்து செய்து பழுத்த திருநாவுக்கரசரைப் போல் நரைவிழுந்து கிழமாகும் வயது வந்த போதிலும் அகிலாண்டேசுவரியின் அருகே அமர்ந்திருக்கும் எம்பெருமான் நின் நினைவை மறவாமல் நாளெல்லாம் செந்தமிழ்ப் பாக்களை இயற்றும் சிந்தை நிறைந்த ஆற்றலைத் தர வேண்டுமய்யா! முப்புரங்களை எரித்த முதல்வனே! கண்வளர்வாய், தாலே தாலேலோ!*

*எத்தனைத் துயர்வரினும் பித்தனின் திருவடியைச்*
*சிந்தனை செய்மனமே! வந்தனை செய்தினமே!*

31. சந்திரன் உலவிய விண்மீன் குழுக்களும்
சமத்துவம் பேணிடும் ஞாயிறும்
இந்திரன் நிலவிய ஏனைய தேவரும்
எண்டிசை மேவிய வேழமும்
அந்தணர் ஞானியர் அருமறைக் காதியர்
அகத்திய நாரதர் யாவரும்
வந்துளர் தஞ்சையின் நாதனை வாழ்த்திட
வள்ளால் தாலே தாலேலோ!

*கருத்துரை : -*

*விண்ணிலிருந்து சந்திரனும் விண்மீன்களும், உலகப் பொது நோக்குடைய கதிரவனும், இந்திரன் தலைமையிலான தேவர்களும், எட்டுத் திசையானைகளும், செந்தண்மை பேணும் அந்தணர்களும், மெய்ஞ்ஞானம் போற்றும் ஞானியர்களும், அரிய வேதங்களைக் கற்றறிந்த வேதியர்களும், அகத்திய முனிவரும், நாரத தேவரும் தஞ்சைப் பெருவுடையாரே, உம்மை வாழ்த்தி வணங்கிட வந்துள்ளனர். வள்ளலே! கண் வளர்வாய் தாலே தாலேலோ !*

*சமத்துவம் காண்பது சூரியனுடைய பெருங்குணமாகும். மானிடரும் ஏற்றத் தாழ்வின்றி இறைவனைப் பணிந்திடில் வேற்றுமைகள் நீங்கி ஒற்றுமை வளரும்.*

*இன்றைய உலகில் சமத்துவம் நிலைக்க உருவாக்கப் பெறும் இடங்களில்கூட ஒற்றுமையின்மையைக் காண்கிறோம்.*

## 4. சப்பாணிப் பருவம்

32. ஆவினுள் பெருகிவரும் அன்பின் ஊற்றாய்
அன்றாடம் பெறுகின்ற சுவைத்தீம் பாலும்
பூவினுள் ஒளிந்திருந்து சுரும்பு பாட
எப்போதும் சுரக்கின்ற இனிய தேனும்
காவினுள் வளர்பலாவின் சுளையும் சேர்த்துக்
கனிவுடனே ஏற்றுமகிழ் தஞ்சை ஆளும்
கோவினுள் மனத்தாளும் திறமே ஈந்து
கொதிப்பின்றிச் சப்பாணி கொட்டு வீரே!

*கருத்துரை : -*

*கன்றின் மீதுள்ள அன்பு மிகுதியால் தாய்ப்பசுவிற்கு நாள்தோறும் சுரந்து நாம் கறக்கும் சுவைமிகுந்த பாலையும் பூவுக்குள்ளே எப்போதும் சுரந்து பிறர் கண்களுக்குத் தெரியாமல் ஒளிந்து கொண்டிருக்கும் இனிமையான தேனையும், சோலைகளில் அடர்ந்து உயர்ந்து நிற்கும் பலா மரத்துப் பழத்தின் சுளையையும் சேர்த்து, இறைவா! உனக்கு வழங்குகின்றோம். நீ இதனை அன்புடன் ஏற்று மகிழ்ந்து தஞ்சையிலே பிரகதீசனாக வீற்றிருந்து ஆட்சி செய்கிறாய். எம்மனத்தில் தொடர்ந்து குடி கொண்டு பக்தி செலுத்தும் மனப் பக்குவத்தை, வலிமையை எமக்குக் கொடுத்து எம்மீது எவ்விதச் சினமுமில்லாமல் பிரகதீசனே! சப்பாணி கொட்டி விளையாடுவாயாக!*

*பாலும் தேனும் பலாவும் கலந்தாற் கிடைக்கும் சுவை பாரோர் அறிந்ததே. இந்தச் சுவையின் இனிமையையும், நம்மிடம் உள்ள பணிவெனும் பண்பாகிய எளிமையையும், இறைவன் மீது கொண்டுள்ள தூய பக்தியையும் கலந்து கொடுத்தால் எம்பெருமான் ஏற்றுக் கொள்ளாமலா இருப்பார் ? ஏற்று மகிழ்ந்து வேண்டிய வரமும் தருவார்.*

33. பொங்கரி மேலமர்வாள் புன்னகைக்க வேதியன்போல்
ஒருநூற்றுத் தொண்ணூற் றிரண்டு
திங்களுடை காளையெனத் தெளிவிக்கும் குருவடிவாய்
முனிகட்கு வேதம் சொன்ன
திங்களணி தென்னவனே! தேடக் கிடைக்காத
தீந்தமிழின் தெய்வப் பொருளே!
சங்கரனே! தஞ்சைவளர் நஞ்சையெலாம் செழித்தோங்கச்
சப்பாணி கொட்டி யருளே!

*கருத்துரை : -*

*கம்பீரமான தோற்றமும், வலிமையும் கொண்ட சிங்கத்தை வாகனமாக உடைய சக்திதேவி மகேசனைப் பார்த்துப் புன்னகை செய்யுமாறு, பதினாறு வயது கொண்ட இளமையான வேதியனாய்க் காளை போன்ற துடுக்குடன் முனிவர்களுக்கு வேதத்தை விளக்கிடக் குருவாகத் தோன்றிக் காட்சி தந்த, திங்களைச் சூடிய சொக்கநாதப் பெருமானே! சுவையான இனிய தமிழை எமக்குரிய தாய்மொழியாக வழங்கி அருளிய, அரியும் பிரமனும் தேடியும் கண்டறிய முடியாத தெய்வமே! சங்கரனே! தஞ்சையைச் சூழ்ந்த வயல்களில் விளையும் செந்நெல், வாழை, கன்னல் போன்ற நன்செய்ப் பயிர்கள் தழைத்துச் செழிக்கச் செய்து சப்பாணி கொட்டியருள்வாயாக!*

*ஆசிரியராய், மாணவராய், அடியவராய், அருந்தமிழ்ப் புலவராய், விறகு வெட்டியாய், வேலையாளாய் என யாவுமாய் நின்ற பரம்பொருள் நமக்கு அருள் வழங்கும் வள்ளலாயும் தஞ்சையில் பெருவுடையாராயும் வீற்றிருக்கிறார்.*

34. பார்புனல் ஒளிவளி வெளியென் றோதும்

பஞ்சபூ தங்களாய் நின்ற தேவே!

கார்திகழ் மேருவில் கண்ணைய ராமல்

கடுந்தவம் புரிந்த தாலே கன்னி

பார்வதி தேவியைப் பக்க மேற்றாய்!

பார்க்குண வளித்திடும் பசிய தஞ்சை

சார்ந்தவர் தந்துயர் தீர்க்க வேண்டிச்

சமத்துவச் சப்பாணி கொட்டு வாயே!

*கருத்துரை :-*

*நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்று சொல்லப்பெறும் ஐந்து பூதங்களாய்த் திகழும் தேவனே! மேகங்கள் உலவும் மேருமலையில் இறைவா! நீ கடுமையாய்த் தவம் செய்தபோது கன்னியாக இருந்த பார்வதி தேவி உனை எண்ணி நோன்பிருந்து மணந்து கொள்ளச் செய்தாய். பக்கத்தில் இடம் தந்து சக்தியை ஏற்றாய். உலகுக்கு உணவுப் பொருள்களை விளைவித்து வழங்கும் பசுமையான தஞ்சைப் பகுதி மக்களின் துயரங்களைத் தீர்த்தற்காகவும், சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வில்லாச் சமத்துவத்தை நிலைநாட்டவும் பெருவுடையாரே! நீ சப்பாணி கொட்டி மகிழ்வாயாக!*

*ஐம்பூதங்களுள் அடங்கியவன் இறைவன். இயற்கை வழிபாட்டின் ஏற்றத்தையும், இவ்வுலக மாந்தரின் இயல்புகளுக்கேற்ப இயற்கையில் மாற்றத்தையும் உணரச் செய்பவன் இறைவன். யாவரும் மனிதரே என்னும் பொதுமையான இயல்பை ஏற்படுத்தவே புதுமையான வகையில் சமத்துவம் படைக்க ஆண்டவன் விரும்புவான்.*

35. ஒட்டிய வயிறும் உடம்பென்பும் தோன்ற
உழைக்கின்ற கூட்ட மிங்கே
கொட்டிய பொருளால் கோட்டையைப் பிடித்துப்
பிழைக்கின்ற கூட்ட மங்கே
எட்டிய வரைக்கும் ஈட்டியைப் பாய்ச்சி
ஏய்க்கின்ற கூட்ட மாற்ற
மட்டுவார் குழலாள் மனத்தமர் செல்வா!
சப்பாணி கொட்டி வாவே!

*கருத்துரை : -*

பசிக்கேற்ற உணவின்றிக் குறைவாகவே உட்கொள்வதால் ஒட்டிய வயிற்றினையும், உடம்பில் எலும்புகள் யாவும் தெரிகின்ற தோற்றத்தையும் உடைய, உழைத்துப் பிழைக்கும் மக்கள் கூட்டம் ஒருபுறம். தம்மிடம் உள்ள மிகுதியான பொருளையும் செல்வத்தையும் பயன்படுத்தித் தேர்தலில் வெற்றி பெற்றுக் கோட்டையையும் பிடித்து இழந்த செல்வத்தைப் பன்மடங்காகப் பலவழிகளில் சேர்ப்பவர்கள் ஒருபுறம். ஏழை, எளிய மக்களை ஏமாற்றித் துன்பம் என்னும் ஈட்டியைப் பாய்ச்சி ஏய்த்து வாழ்கின்ற இழிவான மாந்தரை மாற்றித் திருத்திடத் தேன் நிறைந்த மலர்கள் சூடிய நீண்டு அடர்ந்த கருமையான கூந்தலை உடைய பெரியநாயகி அம்பாளின் மனத்திலே வீற்றிருக்கும் பெருவுடையாரே! சப்பாணி கொட்டி மகிழ்வீராக!

ஒளிமயமான எதிர்காலம் தெரியும் என்னும் உயர் நம்பிக்கையோடு உழைத்து ஓடாய்த் தேயும் மக்களை ஏய்த்துப் பிழைக்கும் எண்ணமுடையவர்கள் மாற வேண்டும். எல்லாரும் எல்லாமும் பெற வேண்டும்; இல்லாமை இல்லாமல் அறவேண்டும்; பிரகதீசனின் பேரருள் பெற வேண்டும்.

**36. துணிகரச் செயலினைத் துயர்தரும் போக்கினைத்**

**தூயவா யாக்கினை! தொல்புகழ் காத்தனை!**

**பணிவுறச் செய்தனை! பகையறும் பண்பினைப்**

**பலபடி வளர்த்தனை! படிப்பறி வளித்தனை!**

**வணிகனாய் வந்தனை! வளையலும் விற்றனை!**

**வனிதையர் கற்பினை அணியெனக் கொண்டனை!**

**தணிகைவேல் தந்தனை! தஞ்சைமண் மைந்தனே!**

**தண்கரச் சப்பாணி கொட்டி வருகவே!**

*கருத்துரை : -*

*பிரகதீசனே! தஞ்சை மண்ணுக்குரியவனே! துன்பம் தரும் நிலையில் உள்ள செயல்களைத் துணிந்து செய்யும் மனப்பான்மைகளைப் போக்கி உள்ளத்தைத் தூயதாக்கினாய்; பழமையும் பெருமையும் மிக்க குடும்பத்தின் சிறப்பைக் க்காப்பாற்றினாய்; பணிவுடன் பிறரோடு பழகும் இயல்பைக் கொடுத்தாய்; எல்லாரிடமும் பகையில்லாமல் நட்புறப் பழகும் பண்பைப் பலமடங்கு வளர்த்தாய்; கல்வியறிவையும் கொடுத்தாய்; நீ வளையல் விற்கும் வணிகனாய் வந்தாய்; பெண்கள் தம் கற்பைக் காக்கும் காவலனாய்ப் பொறுப்பேற்றாய்; திருத்தணிநாதனாம் வேலனைக் கொடுத்தாய்; நின் குளிர்ச்சி தரும் கைகளால் சப்பாணி கொட்டுவாயாக!*

*பாரில் உள்ள மகளிர்க்கெல்லாம் பாதுகாவலன் அந்தப் பரம்பொருள். பாதியை உடலில் பாகமாய்த் தந்து பெண்மையின் சிறப்பை உலகறியச் செய்தவன். நாமும் பெண்ணினத்தை மதித்தாலே பெருவுடையாரை மதிப்பது போலாகும்.*

37. கலக்கமுறு நெஞ்சினர்க்குக் கரங்கொடுத் துதவுவதால்
கடன்படவே நேரிட் டாலும்
இலக்கணங்கள் இயம்புகின்ற எழுத்தசைசீர் பிறழுவதால்
எழுத்துலகம் ஏசிட் டாலும்
விலக்குகிற நோக்கினிலே வீட்டார்கள் பேசினாலும்
விடையுடையார் சிந்தை ஒன்றே
இலக்கெனயான் கொண்டிலங்க இதயத்துக் காற்றல்தரச்
சப்பாணி கொட்டி வாவே!

கருத்துரை : -

துன்பமுறும் நெஞ்சத்துடன் வாழும் ஏழை எளியவர்க்கு உதவி செய்து செய்து கடனாளியாக நேர்ந்தாலும், எழுத்து, அசை, சீர் முதலிய செய்யுள் உறுப்புக்கள் பிறழ்ந்து எழுதிடல் கண்டு தமிழறிஞர்கள் வசைபாட நேர்ந்தாலும், வீட்டிலுள்ளவர்கள் மனம் நோகுமாறு பேசிப் புறக்கணிக்க நேர்ந்தாலும், காளை வாஎனகனாகிய பிரகதீசனைப் பற்றிய சிந்தையை மட்டுமே உள்ளத்தில் கொண்டிருக்கும் கொள்கையுடன் எந்நாளும் வாழுகின்ற ஆற்றலை வழங்க இறைவா ! நீ சப்பாணி கொட்டுகவே !

சமுதாயத்தில் பல சங்கடங்களைச் சந்தித்தாலும் சர்வேசனைப் பற்றிய சிந்தை எப்போதும் கொண்டிருத்தல் வேண்டும். அந்த மனவலிமையைத் தஞ்சைப் பெருவுடையார் அருளுவார். .

மனவலிமையை மகேசன் அருளும் வரை மனந்தளராமல் அவன் திருவடி போற்றுகின்ற நிலை கொள்வார், அதற்குரிய பயன் கொள்வரர்.

38. **நிலங்கொழிக்கப் பச்சைப்பட் டாடை போர்த்தி**

**நெஞ்செலும்பு தெரியும்வகை மேனி காட்டிக்**

**கலங்கணக்கில் நெல்விளைத்துக் களிப்பில் நாளும்**

**கழனியொன்றே உயிருடலாய்க் கருதி வாழ்ந்து**

**புலங்கலங்கி நிற்கின்ற உழவர் கூட்டம்**

**பொழுதுபுலர் காலமென்றோ? நன்செய் காக்கக்**

**கலங்கரையும் விளக்கினைப்போல் காவி ரித்தாய்க்**

**கருணையுடன் சப்பாணி கொட்டு வாயே !**

*கருத்துரை : -*

*விலா எலும்புகள் தெரியும் வகையில் உடலைக் காட்டி உழைக்கும் உழவர்கள் நிலமகளுக்குப் பயிர்கள் என்னும் பச்சைப் பட்டாடையைப் போர்த்துவார்கள். நாள்தோறும் வயல்களையே உயிராகவும், உடலாகவும் கருதிக் கலம்கலமாக நெல் விளைத்தும் வறுமை ஒழியாததால் மதிமயங்கி வாழ்கின்ற உழவர்களின் காலம் எப்போது விடியுமோ ? நன்செய் நிலங்களைக் காக்கும் கலங்கரை விளக்கமாகத் திகழும் பிரகதீசப் பெருமானே ! காவிரித் தாயின் கருணையுடன் நீ சப்பாணி கொட்டியருள்வாயாக !*

*ஓடாய்த் தேய்ந்து உலகுக்கே உணவளிக்கும் கூட்டம் உழவர் கூட்டம். எல்லார்க்கும் உணவுப் பொருளை ஏற்றுமதி செய்கின்ற உழவர்களின் இல்லத்து அடுப்புகளில் எத்தனையோ நாள்கள் பூனைகள் உறங்குகின்றன. உழைக்கும் கூட்டம் உணவுடன் வாழ உதவும் கரங்கள் நமக்கு வேண்டுமெனத் தஞ்சைப் பெருவுடையாரை வழிபடுவோம்.*

39. உலைக்கரிசி தேடி உழைப்பவர்கள் கோடி

உடலுருகித் தேய்ந்து நாளும்

விலைக்கரிசி வாங்கி வேதனைகள் தாங்கி

விடியலினை நாடி வாழும்

நிலைக்கரசின் போக்கே நெஞ்சுருக்கும் சாட்சி

நேயமிக்க நாட்டைக் காட்ட

மலைக்கர சாயமர்ந்து மண்புரக்கும் ஈசா !

சப்பாணி கொட்டு வாயே !

கருத்துரை : -

நாள்தோறும் உணவுக்கெனச் சோறு சமைக்க உலைக்கு அரிசியைப் பெற உடலுருகித் தேயுமளவிற்கு உழைத்துப் பொருளீட்டுபவர்கள் கோடிக்கணக்கில் வாழ்கின்றனர். உழைப்பில் கிடைத்த பொருளில் விலைக்கு அரிசி வாங்கி, உடல், மனத்துயரங்கள் என்னும் வேதனைகளையெல்லாம் தாங்கிக் கொண்டு, இனியேனும் காலம் விடியாதா? என ஏங்கிப் பலகோடிமக்களும் வருந்தி வாழ்கின்றனர். இதற்கு நாட்டை ஆளுகின்ற அரசியல் கட்சிகளின் அணுகுமுறைகளே காரணம். அரசாங்கத்தின் போக்குகள் தாம் உள்ளத்தை உருக்கும் சாட்சியாக அமைகின்றது. மக்கள் மீது நேயம் கொண்டவர்கள் ஆளுகின்ற நாடாக எம் நாட்டை உலகுக்குக் காட்ட மேருமலைமீது அமர்ந்து உலகுபுரக்கும் மகேசனே! நீ தஞ்சையில் சப்பாணி கொட்டுவாயாக!

மக்களின் துயரைத் துடைக்கின்ற அளவுக்கு நாடாளும் அரசாங்கம் அமைந்தால் நீர்வளம் பெருகும்; நிலம் வளமாகும்; குடிமக்கள் உயர்ந்து மகிழ்ச்சியடைவர்; அரசும் நிலைக்கும்.

40. வசந்தங்கள் மாலையிட வாசலுக்கே தேடிவரும்

வண்ணமலர்ப் பூச்சொரிய வஞ்சியினம் கோடிவரும்

பசித்தவர்க்கு மட்டுமன்றோ பார்பொருளின் மீதெல்லாம்

பகுத்தளிக்கும் நோக்கமுடன் பரிவுள்ளம் பாடிவரும்

கசிந்துருகத் தெரிந்தார்க்கு மட்டுமன்றோ கடவுளவர்

திருவடியில் காலமெல்லாம் தொண்டுசெயக் கூடிவரும்

புசித்தொருகால் பசிபோக்கிப் பொழுதுபோக்கும் எம்மனோர்க்கும்

பொருள்வழங்கப் பிரகதீசா சப்பாணி கொட்டுவாயே !

*கருத்துரை : -*

*பிரகதீசனே ! உனக்கு மாலையிட்டு மகிழ்ச்சி கொள்ள இனிமையான வசந்த காலங்கள் நின் கோயில் வாசலைத் தேடிவரும். அழகுமிக்க மலர்கள் தூவி உன்னை வணங்கப் பெண்கள் கோடிக்கணக்காக வருவார்கள். பசியை அதன் மகத்துவத்தை அறிந்தவரால் மட்டுமே இவ்வுலப் பொருள்களைப் பிறருக்கும் பகிர்ந்தளிக்கின்ற கருணை உள்ளம் ஏற்படும். அதுபோன்று கடவுளை எண்ணியுருக வல்லார்க்கு மட்டுமே, இறைவா! நின் திருவடியில் காலமெல்லாம் கிடந்து தொண்டு செய்யக் கூடிய மனப்பான்மை உண்டாகும். ஒருவேளை உணவுண்டு பசிபோக்கி வாழும் என் போன்றோர்க்கு வாழ்க்கைக்குத் தேவையான நற்பொருளை வழங்கப் பெருவுடையாரே ! சப்பாணி கொட்டுவீராக !*

*பசித்துன்பமறிந்தார்க்கு மட்டும் பிறர் துயரை அறியமுடியும். பக்தியென்னும் பண்பின் பொருளறிந்தாரால் மட்டுமே பெருவுடையாரின் பெருமையறிந்து தொண்டு செய்ய முடியும்.*

41. கரிசல் காட்டிடையே கனிவான இதயங்கள்
காத்திருந்து மழையில் லாமல்
விரிசல் நிலத்திடையே விழுந்தாலும் மனத்தில்லை
வினைபோக்கும் தஞ்சை நாதன்
பரிசில்தினம் வேண்டிப் பழமைதனைப் போக்குமுளப்
பகுத்தறிவுப் பசுமை காண
நெரிசல் நிறைந்திடவே நிற்கின்றார் வாசலிலே
சப்பாணி கொட்டு வாயே !

*கருத்துரை : -*

*கனிவான உள்ளம் படைத்த மக்கள் தம் கரிசல் மண் வளம் நிறைந்த நிலங்களில் நீண்ட நாள் மழையில்லாமல் விரிசல் விழுந்து வறட்சி ஏற்பட்டாலும் அவர்களுடைய மனத்தில் விரிசல் ஏற்படாது. மக்கள் உறுதியுடன் வாழவும், தீவினைகளையகற்றும் தஞ்சைப் பெருவுடையாரின் அருள் வேண்டித் தேவையற்ற பழைய பழக்கங்களைப் போக்கவும் தேவையான புதிய பழக்கங்களை ஏற்கவும் வல்ல பகுத்தறிவைப் பரிசாக வேண்டி நாளும் பெருந்திரளாகப் பெரிய கோவிலில் நிற்கின்றார்கள். இறைவா! அவர்தம் வேண்டுதலை நிறைவேற்றச் சப்பாணி கொட்டுவீராக !.*

*வறுமையை வாழ்நாளில் சந்திக்க நேரினும் மன உறுதியுடன் தாங்கிக் கொள்பவன் தமிழன். தேவையற்ற பழமைகள் எவை ? தேவையான புதுமைகள் எவை? என்றறிந்து செயல்படும் பகுத்தறிவை வழங்குபவன் இறைவன்.*

## 5. முத்தப் பருவம்

42. மஞ்சாவூர்க் கழனிகளில் மழைகொ டுக்கும்

மருதநில மாந்தருக்கு வளங்கொ டுக்கும்

நஞ்சாயூர்ந் திடையிருந்து பகைமி ரட்டும்

நாளுக்குநாள் வதைக்கின்ற வறுமைக் கெல்லாம்

அஞ்சாவூர் எனும்பேறை அளிக்கும் வள்ளல்

இஞ்சிமஞ்சள் கதலிசெந்நெல் கன்ன லீயும்

தஞ்சாவூர்ப் பெருவுடையார் கனிந்த வாயால்

தண்முத்தம் பலநூறு தருக ஐய!

*கருத்துரை :-*

*மருதநிலமகிய வயல்கள் சூழ்ந்த பகுதியில் உழவுத்தொழில் செய்து வாழும் மக்களுக்கு மகிழ்வளிக்கும் வகையில் மேகங்கள் திரண்டு வந்து மழையாகப் பொழிந்து வளம் பெருக்கும். சிலகாலம் மாந்தரிடையே நஞ்சுபோலக் கலந்து நாளுக்கு நாள் துன்புறுத்தி மிரட்டுகின்ற வறுமை என்னும் பகைவனைக் கண்டு அஞ்சாதவர் வாழும் ஊர்தான் தஞ்சாவூர் என்னும் பெயர் பெறத் தக்க துணிவை வழங்கும் வள்ளலாகிய தெய்வமே !*

*இஞ்சியும், மஞ்சளும், வாழையும், நன்னெல்லும், கரும்பும் குறையாமல் கொடுக்கும் தஞ்சைப் பெருவுடையாரே ! செல்வமே ! நும் கனியிதழால் நூற்றுக்கணக்கில் இனிமையான முத்தங்களைத் தருவீராக!*

43. சித்திரை முழுநிலவில் பத்தியைச் செலுத்திவிட
இந்திரற் கருள்சுரந்தே காக்கும்
அத்தனே! தொழுதுவலம் செய்திடின் பழியகலும்
அறிந்திடும் ஐராவதம் காட்டுப்
பித்தனே காரைக்கால் அம்மையாற் பெருமகிழ்வு
பேணிய பிறப்பிலியே! அன்பு
முத்தமும் வேண்டிவரம் நித்தமும் கேட்டிருப்போர்
முகஞ்சி வக்கமுத்தம் தாவே!

கருத்துரை : -

இந்திரன் தன்வினை நீங்கச் சித்திரைத் திங்களில் முழு நிலவன்று பத்தியுடன் வழிபட்டான். சிவபெருமானைத் தொழுது வலமாக வந்து வணங்கினால் பழிபாவம் போகும் என்று வெள்ளையானையாம் ஐராவதமும் அறிந்து கொண்டது. காட்டிடையே நடனமாடிக் காரைக்காலம்மையாரை மகிழ்வூட்டிய பிறப்பற்ற முழு முதற்கடவுளே ! நின் அன்பு முத்தங்களை வரமாக வேண்டி நாளும் உன்னுடைய ஆலய வாசலில் நிற்போரின் முகம் சிவக்குமாறு முத்தங்களைத் தருகவே !

தூயபத்தரின் உள்ளம் மகிழ இறைவன் பித்தனாகக் கூட மாறுவான்; வேண்டுவரம் வேண்டும்போது வழங்குவான். சித்ரா பௌர்ணமியன்று மதுரைச் சோமனை வழிபட்டால் தீவினையகலும்.

44. கூனலிளம் மதியாளைக் கங்கை யோடும்

கொன்றையம் மலர்தன்னை வேணி சூடி

மீனமர்சேல் விழியாளை இடப்பா கத்தில்

மேலவர்பூ மாரிதூவ ஏற்ற செம்மல்

தேனமர்பூஞ் சோலைமலி திருவை யாற்றுத்

தென்றிசையின் தெள்ளமுதே பிரக தீசா!

வானவன்மா தேவிமகன் வனப்பு தோன்ற

வந்தவனே! முத்தம் தருக வந்தே!

*கருத்துரை :-*

*கொன்றை மலரையும், இளம்பிறை நிலவையும் கங்கா தேவியையும் கூந்தலிலே சூடி, மீன்போன்ற விழியுடைய உமையம்மையைத் தேவர்கள் பூமழை தூவத் தம் இடப்பாகத்தில் இடம் தந்து ஏற்றுக் கொண்டவர் எம்பெருமான், தேனிறைந்த மலர்கள் பூத்துக் குலுங்கும் சோலைகள் நிறைந்த திருவையாற்றுக்குத் தெற்கே உள்ள தஞ்சாவூரில் குடிகொண்ட தெளிந்த அமுதம் போன்ற இறைவனே! பிரகதீசனே! நீ சோழர் குலத்தேவியான வானவன் மாதேவி பெற்றெடுத்த சிங்கம் போன்ற இராசராச சோழனின் புகழும், ஆற்றலும் உலகிற்குத் தெரிவிக்கத் தஞ்சையிலே அவன் எழுப்பிய பெரியகோவிலில் எழுந்தருளியிருக்கிறாய். பெருவுடையாரே! எமக்கு அன்புடன் முத்தம் தருகவே!*

*காவிரி, குடமுருட்டி, வெண்ணாறு, வெட்டாறு, கொள்ளிடம் என ஐந்து நதிகள் பாயும் அழகான ஓரிடத்தில் தாம் கோயில் கொண்டுள்ள ஈசனே ஐயாறப்பன் என்னும் பஞ்ச நதீசுவரர். ஆற்றங்கரை எங்கிலும் அழகான பசுமை நிறைந்த வயல்களும், சோலைகளும், மா, பலா, வாழை என முக்கனியும் கிடைக்கும் சூழலும், இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழ் கிடைக்கும் தமிழ்க் கல்லூரிகளும் தஞ்சைப்பகுதியில் காணலாம்.*

45. வெள்ளியொளி தோன்றிவிடின் விடியலது வந்ததென்று
விண்ணளப்போர் விளம்பு மாறும்,
கிள்ளியெறி தீப்பிழம்பு கிளையொடுவேர் அறுக்குமெனக்
கிளரிளையோர் கிளம்பு மாறும்,
துள்ளிவிளை யாடுசிறு தொண்டருளம் போற்றுமாறும்
தஞ்சையெழில் தழைய நின்ற
வெள்ளிமலை மன்னவனே! வெற்றிமுகப் பிரகதீசா!
வேண்டுமுத்தம் தருக வந்தே!

*கருத்துரை : -*

*விண்ணிலே வெள்ளி முளைத்தாலே விடியப் போகிறது என்ற கருத்தை வான நூலறிஞர்கள் சொல்லியுள்ளார்கள். சிறு தீப்பொறிதானே என்று சாதாரணமாய் எண்ணி வீசி எறிகின்ற தீயானது மரங்களின் கிளை முதற்கொண்டு வேர் வரையிலும் பரவிப்பல மரங்களையும், காடுகளையும் கொழுந்து விட்டெரியச் செய்கிறது. இது போன்று இன்றைய இளைஞர்கள் மிகுந்த ஆற்றலோடும், ஆவேசத்தோடும் கிளர்ந்து எழுகின்றனர். இவ்வாறு விடியலிலேயே இளைஞர்களும், அடியவர்களும் எழுந்து சுறுசுறுப்பாக வழிபாடு முதலான செயல்களில் ஈடுபடுகின்றனர். தூய மனம் படைத்த யாவர்க்கும் தஞ்சையிலே வீற்றிருக்கும் பிரகதீசனே! நலமான, செழிப்பான வாழ்வளிக்கும் வெள்ளிமலை வேந்தனே! நீ எமக்கு வேண்டிய முத்தங்களைக் கொடுப்பாயாக!*

*வெள்ளி முளைப்பது விடியலைக் காட்ட, வெள்ளிமலையாகிய கைலாயத்தின் மன்னனாகிய சிவபெருமான் தஞ்சையிலேயே பிரகதீசனாய் எழுந்தருளிச் சுறுசுறுப்பான இளைஞர்கட்கும், அடியவர்கட்கும் அருள் பொழிகின்றார். பெருவுடையாரைத் தொழுதால் பெருவெற்றி பெறுவது உறுதி.*

46. பரஞ்சோதி முனிவர்க்கும் பாடலே தொழுமுறையாய்ப்

பலகாலும் கொண்டிறைஞ்சும் நாயன் மார்க்கும்

உரங்கூடி வளர்ந்தமைக்குத் திருவெண் காடேகும்

உத்தமன் நீ மன்னர்க்கும் உவந்து தந்த

வரங்கூடி வந்ததால் பெரிதாய்த் திருக்கோயில்

அமைப்பித் தாங்கதனுள் குடிய மர்ந்தாய்

பரந்தேடிப் பரம்பொருளே, பாதம் அடைவார்க்குப்

பலகாலும் முத்தமழை பொழிக வந்தே!

கருத்துரை : -

திருவிளையாடற் புராணம் இயற்றிய பரஞ்சோதி முனிவர்க்கும், இறைவனைத் தொழுது வழிபடும் முறைகளில் பாடிப் பணிவதையே தாம் எப்போதும் மேற்கொண்டு வணங்கி வந்த அறுபத்து மூன்று நாயன்மார்களுக்கும் பக்தியின் வலிமையை மேம்படுத்துவதற்காக இறைவா ! நீ திருவெண்காட்டிலும் வீற்றிருந்து அருள் வழங்குகிறாய். சோழமண்டலத்தின் தலைநகரங்களுள் ஒன்றாகிய தஞ்சாவூரைத் தலைநகராய்க் கொண்டு ஆண்ட இராசராசனுக்குப் பேரருள் வழங்கிப் பெரிய கோவிலொன்று அமைக்கச் செய்து அதிலே ஆனந்தமாகக் கோயில் கொண்டுள்ள பிரகதீசப் பெருமானே ! வீடு பேறு அடைதற்கு நின்பாதம் வந்து பணிந்து தொழும் எம் போன்றோர்க்கு முத்தங்களை மழைபோல் எப்போதும் கொடுத்து அருள்புரிவாயாக !

எந்த ஒரு செயல் செய்யவும் மனவலிமையும், உடல் வலிமையும் தேவை. இந்த வலிமைகளை வழங்கும் வள்ளல் தஞ்சைப் பெருவுடையார். படைத்தல், காத்தல், அழித்தலில் மூன்றாம் செயலுக்குரியவன் சிவன். ஆம் அச்சத்தை அழித்துத் தீய எண்ணம், தீய செயல்களை அழித்துப் புதுப் பொலிவு வழங்குபவன் அவன். நாம் பெருவுடையாரின் பேரருள் பெறுவோம்.

47. முல்லையம் பூநிரலின் முறுவலினைக் கொண்டார்தம்
முகைநகிலில் முயங்கிக் கால
எல்லையெ லாம்போக்கி இளமைதனைக் கொன்றிங்கோர்
ஏளனங்கொள் பிறவி போலச்
சொல்லையெ லாம்சுருக்கிச் சோகவுரு வோடலையும்
எமைக்காக்கத் தஞ்சை வந்தே
தில்லையில் நடம்புரியும் தேவனே! நின் திருவிதழால்
முத்தமழை பொழிக இன்றே!

*கருத்துரை :-*

*கார்காலத்தில் பூத்துக் குலுங்குகின்ற முல்லைப்பூக்களைப் போன்ற வெண்மையான, வரிசையான பற்கள் சிறிதளவாய்த் தெரியுமாறு புன் முறுவல் பூக்கின்ற பெண்களுடைய இளமையான தாமரை மொட்டு போன்ற கொங்கைகளின் அழகிலே மயங்கிக் கிடந்து இளமையெலாம் போக்கிக் காலத்தே செய்யவேண்டிய கடமைகளையெல்லாம் செய்யாமல் பிறர் தூற்றிப் பேசும் ஏளனமான பிறவிகளைப் போல மற்றவருடன் மகிழ்ச்சியாக மனம் திறந்து பேச இயலாதவராய்ச் சோகமே தாண்டவமாடும் முகத்தோடு வாழ்ந்து திரிகின்ற எம்மைப் போன்ற இளைஞர்களைக் காப்பாற்றி நல்வழிப்படுத்தி வாழ்விப்பதற்காகத் தில்லையிலே நடனமாடுகின்ற எம் பெருமானே! நீ தஞ்சையில் பிரகதீசனாக எழுந்தருளியிருக்கிறாய். உன்னுடைய அழகிய இனிமையான இதழ்களால் அன்பு முத்தங்களை மழையாகப் பொழிவாயாக!*

*பெண்களின் சிரிப்பையும், அவர்தம் மேனியழகினையும் நிலையான வாழ்வென்று நினைத்து இன்றைய இளைஞர்களில் பலர் வாழ்வில் திசைமாறித் திரிகின்றனர். உண்மையான வாழ்வில் இன்பம் எங்கே இருக்கிறது என்று கண்டறிந்து வாழ்பவன் காலத்தை வெல்பவன் ஆவான். முக்கால நாயகன் மூலக்கடவுள் தஞ்சைப் பெருவுடையாரை வழிபடின் அந்த வல்லமை வரும்.*

48. சொல்விளைந்து போற்றும் சோழப்பெரு நாட்டில்

சோறளிக்கும் வேந்தன் பாடுபட்டுப் பல்லூர்க்

கல்பிளந்து வாகைக் கடல்பிளந்து சூடிக்

கட்டுவித்த கோயில் மீதமர்ந்த நாதா !

வில்வளைந்து வானில் விளங்குதலைப் போன்று

விளைச்சலுக்குச் சான்று விளம்புகின்ற தஞ்சை

நெல்விளைந்து சாயும் நிலத்தடி நீர் காக்க

நித்தமொரு கோடி முத்தமழை தூவே !

கருத்துரை : -

சோழநாட்டில் நெல்வளம் நிறைந்திருப்பது போன்று தமிழ்வளமும் செழிப்புற்றுத் திகழ்கின்றது. நெல்லும் சொல்லும் தழைக்கச் செய்தது மட்டுமன்றி எம்போன்றோர்க்கு நல்வாழ்வினை வழங்கியவன் இராசராசசோழன். அவன் பாடுபட்டுப் பல ஊர்களினின்றும் கற்களைக் கொண்டு வந்து பொற்கோயில் போன்ற பெரிய கோவிலைக் கட்டினான். கடல் கடந்தும். வெற்றி வாகை சூடிய இராசராசன் எழுப்பிய தஞ்சைப் பெரியகோவிலில் வீற்றிருக்கும் பெருவுடையாரே! வளைந்து தோன்றும் வானவில்லைப் போல் நெற்கதிர் முற்றிச் சாய்ந்து கிடக்கும் தஞ்சையில் விளைச்சலுக்குத் தேவையான நிலத்தடி நீரையும், நீர்வளத்தையும் வழங்கிக் காக்க நாள்தோறும் எமக்கு அன்பாக முத்தங்களை மழையாகப் பொழிவாயாக !

சோழநாடு சோறுடைத்து, தமிழகத்தின் நெற்களஞ்சியம் என்பன போன்ற தொடர்கள் தஞ்சையின் பெருமையைப் பறைசாற்றி நிற்கும். ஆயினும் ஆற்று நீர்வளமும், ஊற்றுநீர் வளமும் குறைந்து விட்டால் பொருளாதாரத்தில் நடுநிலையிலும், கீழ் நிலையிலும் உள்ள உழவர் பெருமக்களின் வாழ்வு கேள்விக்குறியாகி விடுகிறது. இறைவனைத் தூய்மையான உள்ளத்துடன் வேண்டினால் நீர்வளம் பெருகும்; மனித வளம் மேம்பாடு அடையும்.

49. **கண்ணிவெடி வைப்பாரும் கரசேவை புரிவாரும்**

**கருணையின்றி மதத்தின் பேரால்**

**எண்ணிறந்த நல்லுயிரை ஏன்வாங்கு கின்றாரோ?**

**இதயங்கள் திருந்த வேண்டும்**

**மண்ணிதனை உண்டவற்கு மாமனாய் மாமேரு**

**மலையமர்ந்த மன்னா! மீன்போல்**

**கண்ணிதனக் கிடமளித்த கறைக்கண்டா! கனியிதழால்**

**முத்தங்கள் தருக! வந்தே!**

கருத்துரை : -

இன்று நம் நாட்டில் மதத்தின் மீதுள்ள பற்று எனச் சொல்லிக் கொண்டு வெறித்தனமாக, இரக்கமில்லாமல் கண்ணிவெடி வைப்பதும், கரசேவை எனச் சொல்லிக் கொண்டு பிறரைக் காயப்படுத்துவதும் அமைதியாக வாழும் மக்களினத்தில் எண்ணற்ற உயிர்கள் அழிவதற்குக் காரணமாகின்றது. பகையும் அதனால் ஏற்படும் கலவரமும் எப்போது? என்ன நடக்கும்? என்ற அச்சத்தில் மக்கள் அன்றாடம் நடுங்கி வாழ்வதும் தேவைதானா ? இந்தக் கொடுமைகளுக்கு அடிப்படைக் காரணமான மனிதர்களும் அவர்களுடைய தூண்டுதலால் பொருளுக்காகத் தாம் என்ன செய்கிறோம் ? என்று அறியாமலே செயலாற்றும் அப்பாவி ஏழை மக்களும் மனம் திருந்திட வேண்டும். மண்ணை உண்ட மாலவனுக்கு மாமனான மேரு மலையமர்ந்த பெம்மானே ! மீன்போன்ற கண்களையுடைய மீனாட்சிக்குத் தன்னுடலில் இடம் தந்த கறைக் கண்டனே ! தஞ்சைப் பிரகதீசனே ! உன்றன் கனிபோன்ற இதழ்களால் எமக்கு முத்தங்கள் தருவாயாக !

உலகில் அமைதி வேண்டும், எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி இரக்கம் கொள்ளும் இதயம் வேண்டும். அரக்கமனப் பான்மையை அடியோடு அகற்றிவிட்டு அனைவரிடமும் அன்பு காட்ட வேண்டும். மதங்கள் பலவானலும் மனிதம் ஒன்றே. சுவைகள் பலவவானாலும் உணவு என்னும் பெயர் ஒன்றுதான். அந்த மனம் பெற வேண்டி இறைவனிடம் இறைஞ்சுவோம்.

50. **தெக்கணில் அகத்தியர்க்குப் பெருமை சேர்த்துத்**

**தெள்ளமுதச் சுவையூறும் பாக்கள் சேர்த்து**

**முக்கூடல் மாநகரில் சங்கம் காத்து**

**முத்தமிழின் சீர்குலையா தெங்கும் பார்த்து**

**நக்கீரன் பைந்தமிழ்நா வன்மை கேட்டு**

**நாவலரைப் பாவலரைக் காத்த வேந்தே !**

**முக்கால மூலவனே பிரக தீசா !**

**முக்கனிவா யிதழ்முத்தம் தருக வந்தே !**

*கருத்துரை : -*

*சிவபெருமான் கைலாய மலையமர்ந்து வடமொழியைக் காப்பதும், தனக்கு இணையாகத் தென்றிசைப் பொதிகை மலையமர்ந்து தென்மொழியைக் காப்பதற்கு அகத்திய முனிவரை அனுப்பிப் பெருமை சேர்ப்பதும், சொற்சுவையும், பொருட்சுவையும் நிறைந்த அமுதத்திற்கு இணையான இன்பச்சுவைகளையுடைய எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய இலக்கியங்கள் தோன்ற மதுரை மாநகரில் சங்கங்கள் அமைத்துக் காத்ததும், இயல் , இசை, நாடகம் எனும் முத்தமிழின் சிறப்பு குறையாமல் பேணியதும், நக்கீரனின் தமிழாற்றல் மற்றும் தமிழ்ப்பற்றினை நாடறியச் செய்து, நாவன்மை, பாவன்மை மிக்க தமிழ்ச் சான்றோரைக் காத்ததும் கங்கை சூடிய காவலனாம் கறைக்கண்டனே. இறந்தகால, நிகழ்கால, எதிர்காலங்களைக் கணிக்கும் மூலக்கடவுளே ! பிரகதீசனே ! நின் மா, பலா, வாழை எனும் முக்கனிச் சுவையுடைய வாயிதழால் முத்தம் தந்தருள்கவே!*

*தேசத்தின் இருகண்களாகிய தென்மொழி, வடமொழிகளின் காவலனாய்த் திகழ்பவன் பிரகதீசன். சங்கம் ஏறிப் புலவராய்க் காட்சி தந்து முத்தமிழைக் காத்தவன். முழுமுதற்பொருளாம் மூலவனை வழிபட்டால் முத்தமிழறிவு ஓங்கும்.*

51. நினைவார்க் கருள்பொழியும் நெடுந்தோளன் வீற்றிருக்கும்
துறைவாய் நுழைந்தார்தம் துயர்போக்கும்
பனைவார் நுங்கிளநீர் பசித்தார்க்கும் படுவெம்மை
தணிவார்க்கும்; தஞ்சையெழில் பொழில்சூழ
நனைவார் நண்பினும் நாள்மணக்கும் நாயகனே !
நதியுடனே இருள் நீக்கும் மதியதனைப்
புனைவார்க் கடிமைசெயப் புடைபெயரும் அன்பருக்கே
புதல்வா ! நீ முத்தமழை பொழிந்திடுவாய்!

*கருத்துரை :-*

*நினைத்தவர்க்கும் உடன் வந்து அருள் வழங்கும் நீண்ட திருக்கரமுடைய பிரகதீசப் பெருமான் எழுந்தருளியிருக்கும் தஞ்சைப் பகுதியில் காலெடுத்து வைத்தவர்களுடைய துன்பத்தை இறைவா நீ போக்கிடுவாய் !*

*தஞ்சையைச் சூழ்ந்துள்ள பகுதிகளில் சில இடங்களில் உள்ள பனை மரத்திலிருந்து கிடைக்கும் இளம்நுங்குகளின் சுவையான நீர் உழைக்கும் மக்களின் பசியையும், உடல் வெப்பத்தையும் தணியச் செய்யும். அன்புள்ளம் கொண்டாரின் அன்பில் நனைந்து நட்பை நாள்தோறும் வெளிப்படுத்தும் நாயகனே! தலையில் கங்கை நதியையும், ஒளிமிக்க பிறைநிலவையும் சூடிய இறைவனாம் நினக்குத் தொண்டு செய்ய அணிதிரண்டுவரும் உன் அடியவர்களுக்குப் பிரகதீசனே! அன்பு முத்தங்கள் பொழிகவே!*

*தஞ்சை வந்தாலே, பெருவுடையாரை நினைத்தாலே துயர் நீங்கும். அன்பருக்கு நண்பன் ஆண்டவன்.*

## 6. வருகைப் பருவம்

52. உரம்படியும் உத்தமனார் உயர்வு நோக்கின்
தினம்படியும் திருவடியில் திருக்கல் லால
மரம்படியும் மகேசன் மதுரைச் சோம
சுந்தரனின் சொல்லால் சுகங்காண் மாந்தர்
சிரம்படியும் செல்வமெலாம் கொழிக்கும் இல்லம்
செழிப்படையும் தென்னவரின் சீர்சால் வைகைப்
பிரம்படியும் பட்டநிலை போதும் அய்யா !
பிரகதீசா ! பெம்மானே ! வருக தேவே !

*கருத்துரை :-*

*திருக்கல்லால மரத்தின் கீழ் வீற்றிருக்கும் ஈசனின் சிறப்பை எண்ணித் தினமும் அவர் திருவடியில் பணிந்தால் அவ்வுத்தமனார் வழங்கும் அருளும் வலிமையும் நிலைக்கும். மதுரைச் சோமசுந்தரக் கடவுளின் அருள்கருதித் தலையாலே பணிந்து வணங்கும் அடியவர்களின் இல்லம் யாவும் செல்வங்கள் மிகுந்து செழிப்படையும். எம்பெருமானே! பாண்டி நாட்டில் பாயும் வெள்ளத்தை அடைக்கும் நின் திருவிளையாட்டால் தமிழகத்தின் தென்திசையாம் மதுரையைத் தலை நகராகக் கொண்டு அப்போது ஆட்சி புரிந்த அரிமர்த்தன பாண்டியனிடம் பிரம்பால் அடிபட்டது போதும்.*

*தஞ்சாவூரில் பிரகதீசுவரராய் எழுந்தருளியிருக்கும் பெருவுடையாரே! அருள்மழை பொழிய வருகவே ! பிள்ளைச் செல்வங்களுடன் பெற்றோர்கள் கூட்டம் நின் பெருங்கோவில் வாசலிலே காத்துக்கிடக்கின்றனர். இறைவா ! வந்தருள வேண்டும்.*

53. அடைக்கலமென் றரிவையர்தம் மென்னகிலே சிந்தையுற்று

அடக்கமிலா வாழ்வு வாழ்ந்தோர்

கொடைக்குலவண் கரத்தார்போல் கொடுத்தபொருள் கொஞ்சமல்ல

குடியெண்ணித் திருந்தி வாழும்

படைக்கலமாய்ப் பரம்பொருளின் பதத்தடியைப் பற்றினாலே

பகைக்குணங்கள் பறந்து போகும்

சடைக்கலனாய்ப் பிறைசூடும் பெருமானே ! எமக்கணியாய்ப்

பிரகதீசா ! வருக ஓடி!

*கருத்துரை : -*

*மகளிர்பால் ஈடுபாடு கொண்டு சிற்றின்ப வாழ்வு வாழ்ந்து அடக்கமின்றித் திரிந்தவர்கள் அதற்கென வள்ளலைப் போன்று வாரி இறைத்துச் செலவிட்ட பொருள் மிக அதிகம். அவர்கள் தம் குடும்ப நலன் கருதித் திருந்தி வாழ வேண்டுமானால் பரம்பொருளின் திருவடியைப் பற்றி வாழ்ந்தால் பகைமைக் குணங்களும் அவர்களை விட்டுப் பறந்து ஓடிவிடும். சிவந்த சடையில் பிறைநிலவை அழகாய் அணிந்துள்ள பிரகதீசப் பெருமானே ! எம்மைக் காக்கத் தஞ்சைக்கு ஓடி வருக!*

*சிற்றின்பத்திற்காய்ப் பெரும் பொருளைச் செலவு செய்வதுடன் வாழ்நாளையும் வீணாக்குபவர்கள் அதனை விட்டுச் சிந்தையுள் இறைவனை அமர்த்திப் பேரின்பம் கொள்ளல் வேண்டும்; சீரழிக்கச் செய்து சிந்தையெல்லாம் மறக்கச்செய்து, செல்வமெல்லாம் அழிக்கின்ற சிற்றின்பத்தை அறவே ஒழித்துப் பிரகதீசனின் திருவடியைச் சிந்தையில் சூடுவோம்.*

54. உடையார்முன் இல்லார்போல் பணிவுற் றாழ்ந்தே

ஒருமனத்தால் உயர்கல்வி கற்பார் அல்லால்

அடையார்நற் பெருநிலைதான் என்பர் மேலோர்

அறிந்தவரே உயர்ந்திடுவர் அத்தோ ளங்கு

விடையார்தம் திருப்பாதம் போற்றி நின்றால்

விழுப்பமுறு சான்றோராய் வீடு சேர்க்கும்

சடையார்மா நதிசூடித் தஞ்சை மேவும்

பெருவுடைய பெருமானே! வருக தேவே!

கருத்துரை : -

செல்வம் உடையவர்களிடம் பொருள்கேட்டுப் பெறச் செல்லும் வறியவர்கள் பணிந்து நின்று கேட்டால் மட்டுமே ஓரளவேனும் பொருள் கிடைக்கும். அதுபோன்று உயர்கல்வி கற்க வேண்டுமானாலும் ஒருமித்த மனத்துடன் பணிவுறக் கற்றால் மட்டுமே உயர்நிலை அடைய முடியும். அவ்வாறு பணிந்து கற்காதவர் உயர்நிலை அடையமாட்டார் எனச் சான்றோர்கள் கூறியுள்ளார்கள். இதனை அறிந்தவர்கள் மேல்நிலை அடைவார்கள். அத்துடன், காளை வாகனனாகிய சிவபெருமானே! நின் திருப்பாதங்களையும் வணங்கி வாழ்ந்தால் சிறப்புமிக்க வீடுபேறு வழங்குவாய். கங்கை நதியைச் சடைமுடியிலே அணிந்து தஞ்சையிலே எழுந்தருளியிருக்கும் பெருவுடையாரே! தேவர்கள் போற்றும் தெய்வமே! சிவபெருமானே! வருகவே !

மனத்தாலும், உடலாலும் பணிந்தால் மட்டுமே கல்வி கற்று உயரமுடியும். பணிவில்லாக் கல்வி நீரில்லா நதியைப் போன்றது. ஏட்டுக்கல்வி மட்டுமே கல்வியாகாது, நாட்டுக் கல்வியும் கற்ற மனிதனால் தான் மக்களின் மனத்தில் இடம் பிடிக்க முடியும். மக்களுடைய உள்ளத்தில் இடம் பிடித்த மனிதனுக்கு இறைவனுடைய மனத்திலும் இடம் உண்டு. கல்வியும், சேவையும் இறைவனுக்கு நாம் செய்யும் வழிபாட்டின் கூறுகளாம்.

55. • அயலாரும் வியந்தேங்க அன்பூறும் மனத்தாரும்
அன்றாடம் உனைப்போற்றவே என்றும்
இயலாரும் செயலாற்றும் இளையாரும் உளமார
எங்கெங்கும் சிறப்பூட்டவே ஒன்றும்
முயலாரும் உழைத்தோங்க முனைவாரும் தினந்தோறும்
வழிபாட்டில் களைப்பாற்றவே மன்றுள்
அயராமல் நடமாடும் நடராசப் பெருமானே!
அழகூறும் தஞ்சைவரு வாயே!

கருத்துரை : -

இறைவா! பக்கத்து வீட்டாரும், பக்கத்து நாட்டாரும் வியந்து பாராட்டும் அளவுக்குப் பக்தி நிறைந்த உள்ளத்துடன் நாள்தோறும் உன்னைப் போற்றி வணங்குகின்றார்கள். உடலாலும், பொருளாலும், எப்போதும் எச்செயலும் செய்ய இயலாதவர்களும், துடிப்புடனும் செயல் வேகத்துடனும் எதனையும் செய்து முடிக்க வல்ல இளையோர்களும், தம்மால் இயன்ற வகையில் இயன்ற இடங்களில் எல்லாம் உன்னைப் போற்றி வணங்குகின்றார்கள். முயற்சியே செய்யாமல் சோம்பேறியாய் வாழ்வோரும், உழைத்துத் தம் வாழ்வில் உயர வேண்டும் என்று அயராது பாடுபடுவோரும் நாளும் உன்னை வணங்கி வாழ்த்துகின்றார்கள். அவர்களுடைய மனத்துயரங்களைப் போக்கும் நோக்குடன் சற்றும் அயராமல் தில்லையம்பலத்தில் நடனமாடிக் கொண்டிருக்கும் நடராசப் பெருமானே! நீ தஞ்சையிலே பெருவுடையாராய் எழுந்தருளியிருக்கிறாய். ஆதலின் அழகுமிக்க தஞ்சைப் பிரகதீசனே! எம் வினை போக்க வருகவே !

பக்தியுடன் நாம் செய்யும் வழிபாட்டினைக் கண்டு அண்டை வீட்டார்கள் அதிசயிக்க வேண்டும். நம் நாட்டின் பக்தி மார்க்கத்தை வெளிநாட்டார் பாராட்டுகின்றனர். வழிபாட்டில் மனம் தூய்மையும் வலிமையும் பெறுகின்றது என்பது சான்றோர் முடிவு. தஞ்சைப் பிரகதீசனை வழிபடுவோர்க்கு இந்த நன்மைகள் வந்து வாய்க்கும்.

56. கரும்பும் கனிவகையும் நிறையும் நிலமெனவே

காணும் கவிமகிழும்; அரும்பும் பூவில்

சுரும்பும் சூழல்மதுவும் சூழ்கலை வாணர்கள்

தேடும் திரவியமும் தெரியும்; ஈண்டுத்

திரும்பும் திசையெல்லாம் தேவன் தோற்றம்

திகைப்புப் பரபரப்பில் வாடும் மாந்தர்

விரும்பும் விளையாட்டை விரைந்து மேற்கொள்ளத்

தஞ்சைப் பெரும்பதிக்கே வருக வேந்தே!

*கருத்துரை : -*

வயல்கள் நிறைந்த மருதநிலமாகிய தஞ்சைப் பகுதியில் கரும்பும், பல வகையான மரங்கள் தரும் பழங்களும் கிடைக்கக் கூடிய செழிப்பான நிலமென்று கவிஞர்கள் அறிவார்கள். இங்குக் காணப்பெறும் சோலைகளில் பூத்துக் குலுங்கும் மலர்களில் சுற்றிப் பறந்து திரியும் வண்டுகள் தேனை உண்டு மகிழ்ந்து மயங்குதலைக் கண்டு தமிழ்ச்சான்றோர்களும், ஓவியக்கலை, பாடற்கலை முதலிய கலைகளில் சிறந்த கலைஞர்கள் தேடும் செல்வமும் தஞ்சை சூழ் பகுதியில் நிறைந்திருக்கும். இங்குத் திரும்புகின்ற திசைகளில் எல்லாம் அழகாக இறைவன் நிறைந்திருப்பதை எண்ணித் திகைத்து மகிழ்ச்சிப் பரபரப்பில் சூழும் மக்களின் வேண்டுதல்களை உடனே நிறைவேற்ற இறைவா! நீ எங்கிருந்தாலும் தஞ்சைக்கு விரைந்து வருவாயாக!

வயல்களில் கரும்பாக, சோலைகளில் அரும்பாக ஆலைகளில் இரும்பாக, மலர்களில் சுரும்பாகத் திரும்பும் திசைகளில் எல்லாம் தோன்றுபவன் இறைவன். விண்ணிலும், மண்ணிலும், பெண்ணிலும், அவர்தம் கண்ணிலும் என எங்கும் நிறை பரம்பொருள் தஞ்சையிலே பிரகதீசனாய் எழுந்தருளியிருப்பது நமக்குக் கிடைத்தற்கரிய பெரும் பேறாகும். பார்க்கும் இடம் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம்பொருளின் பாதங்களைப் பணிவோம்.

57. அரங்க மாமணி ஆடுமோர் தூமணி

அணிநட ராசனே ! தூய

கரங்க டாம்தொழும் கலைபயில் நாதனே !

காய்கதிர்ச் செந்நெற் சூழ

மரங்க ளேதரும் தண்ணிழல் வாழ்ந்தே

மனத்தினில் உனைநினைந் தேத்தி

வரங்க ளேபெறும் வாஞ்சையில் நிற்போர்

வளம்பெற வருகவே வாழ்த்தி !

*கருத்துரை : -*

*தில்லையில் நடன மன்றத்தில் தூய்மையான ஒளிவீசும் அணிகலன்களை அணிந்து நடனமாடுகின்ற நடராசப் பெருமானே! தூய்மையான வாழ்க்கை நடத்துகின்ற அடியவர்கள் தம் கரங்களைத் தலையில் வைத்து உன்னை வணங்குகின்றார்கள். இறைவா ! காய்த்து முற்றிய நெற்கதிர்களை உடைய வயல்களைச் சூழ்ந்திருக்கும் மரங்கள் தரும் குளிர்ச்சியான நிழலில் வாழ்ந்து எப்போதும் மனத்தில் உன்னை எண்ணி வணங்கி வரங்களைப் பெற வேண்டும் என்னும் விருப்பத்தோடு காத்துக் கொண்டிருக்கும் மக்களை வாழ்த்தி வரங்களைத் தந்து அவர்களுக்கு வளமான வாழ்வை வழங்கப் பிரகதீசப் பெருமானே! வருவாயாக!*

*ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் ஏய உணர்விக்கும் அன்னை பெரிய நாயகியுடன் வீற்றிருந்து அண்டத்தை ஆளும் பெருவுடையாரே! நடனம் புரியும் தில்லைச் சிற்றம்பலத்தை விட்டுத் தஞ்சைக்குப் பிரகதீசனாய் மக்களை வாழ்த்தி வரங்களை வழங்க வருவாயாக!*

58. செலவிலொரு பாதியைச் சேர்த்துவைக் காதவர்

செல்லுமிடம் யாதினும் சேர்துயர்பல் லாயிரம்

உலவிவரு தென்றலது தவழ்ந்துவரு பூமியில்

உயிரினங்கள் வாழ்வதற்கு நடத்துபோ ராட்டமும்

நிலவிவரு பஞ்சமுடன் நீங்கவரு வாயென

நெஞ்சுருகத் தஞ்சையிலே நின்றுழலும் மாந்தரைப்

புலவிவரும் போதுடலில் இடமளித்த நாதனே!

போற்றிடவும் காத்திடவும் நீ வருக ஓடியே !

கருத்துரை : -

மனிதர்கள் தாம் செய்யும் செலவுகளைக் குறைத்துச் சேர்க்கத் தெரியாதவர்கள் எங்குச் சென்று வாழ்ந்தாலும் துயரங்களைச் சேர்த்துத் துன்பப்படுவர். இனிமையான தென்றல் வீசும் இதமான சூழல் அமைந்த இப்புவியில் மக்களும் பிற உயிரினங்களும் தத்தம் வாழ்க்கையை நடத்துவதற்குப் போராடி வருகின்றனர். இங்கு நிலவுகின்ற பஞ்சம் உடனே நீங்க வருவாய் தேவையென நெஞ்சுருகி நிற்கும் மாந்தர் ஒருபுறம். எம்மிடையே நிலவுகின்ற பஞ்சத்தைப் போக்க இறைவா! உடனே வருவாயாயக! என ஏங்கும் மாந்தர் ஒருபுறமாகத் தஞ்சையிலே வாழ்கின்ற மக்களைக் காப்பதற்கு இறைவா! நீ வருவகவே! பெருமானே! அன்னை உமாதேவி தாட்சாயணியாய் உன்னுடன் வாதம் செய்து பிணங்கியபோது சிவமும் சக்தியும் இணைந்திருத்தலே நன்று என்று உலகுக் குணர்த்த உடலில் இடம் தந்த சிவபெருமானே! தஞ்சையில் பிரகதீசனாய் எழுந்தருளியுள்ள பெருவுடையாரே! மக்களைக் காத்திட வருவாயாக!

பொருளில்லார்க்கு இவ்வுலகில்லை என்பது பொய்யாமொழிவாக்கு. மானிடர் தம் வாழ்வில் கவனம் செலுத்திப் பொருட்செலவில் சிறிதளவு சிக்கனப்படுத்தி வாழ்ந்தால் எதிர்வரும் காலத்தில் இடையூறுகளைப் போக்கி இன்பமாய் வாழலாம். அந்த வாழ்வுக்குரிய சிந்தைகளைப் பெற இறையருள் வேண்டும். அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை.

59. **பாவேந்தர் அகத்தியனார் பரிந்துரையால் நோன்பிருந்து**

**பைந்தமிழர் நாடாண்ட பரிவுளங்கொள்**

**மூவேந்தர் மழைவேண்டி இந்திரன்பாற் சென்றதுவும்**

**முன்னமர்ந்த இருவர்க்கு வரமருளிக்**

**கோவேந்தர் பாண்டியர்க்குக் கொடுக்காத வரம்பெறவே**

**கொண்டலினம் சிறைசெய்தான் மதுரைவந்து**

**தேவேந்தி ரன்மண்டி யிடச்செய்த தென்னவற்கே**

**உரந்தந்த சுந்தரனாய் வருகவே!**

*கருத்துரை : -*

*தமிழ்நாட்டில் மழையின்றி வறட்சியால் மக்கள் தவித்த போது சேர சோழ பாண்டியர்களாகிய மூவேந்தரும் ஒன்றாய்ச் சேர்ந்து தமிழ்ப் பாடல்களுக்கெல்லாம் இலக்கணம் வகுத்தளித்த அகத்தியரிடம் சென்று கேட்க, அவர், நோன்பிருந்து இந்திரனிடம் முறையிடுங்கள் என்று வழிகாட்டினார். மக்கள் நலமே கருத்தில் கொண்ட மூவேந்தரும் இந்திரனிடம் சென்றனர். சேர, சோழர்க்கு மழைக்கான வரம் தந்தான். பாண்டியற்கு வரம் தரவில்லை. பாண்டியன் தன் நாடு திரும்பிச் சினங்கொண்டு மழைமேங்களைச் சிறை செய்தான். எங்கும் மழை பொழிய முடியாமல் மேகங்கள் சிறையிலடைபட்டுக் கிடந்ததால் இந்திரன் மதுரைக்கு ஓடோடி வந்தான்; பாண்டியனிடம் மண்டியிட்டு மன்னிப்பு வேண்டி மழைமேகங்களை மீட்டான். இவ்வாறு இந்திரனை மண்டியிடச் செய்த பாண்டியனுக்கு எப்போதும் அருள் பொழியும் சோமசுந்தரக் கடவுளே! எமக்கும் அருள் வழங்கத் தஞ்சைப் பிரகதீசனாய் வருவாயாக!*

*மழைவளம் இல்லையே, நீர்வளம் இல்லையே என்று அன்று நாடாண்ட மன்னர்கள் மக்கள் நலனுக்காகத் தவித்தனர்; ஓடி அகத்தியரிடம் வழிகேட்டு ஆவன செய்தனர்; நோன்பிருந்தனர்; மக்களாட்சி என்பது அதுதான். மன்னர்கள் ஆண்டபோது மக்களாட்சி நடத்தினர். இன்று மக்களாட்சி என்ற பெயரில் மன்னராட்சி நடைபெறுகிறது. அருள்மழை பொழிபவன் ஆண்டவன். அவனை வழிபடுவோம்.*

60. **தென்றலென மெல்லவந்து தென்னங் கீற்றில்**

**தேனிலவு பாவையென மோது வாயே !**

**நின்றஇரு மரமுரசி நீண்ட காட்டில்**

**நெருப்புதனைப் பகைவரைப்போல் வீசு வாயே !**

**கன்றதனைக் கண்டவுடன் கனிந்தி ரங்கிக்**

**காம்புருகப் பால்சுரக்கும் தாயும் நீயே !**

**மன்றுதிரு நடம்புரிமா ஞாலம் காக்கும்**

**மன்னவனே ! பிரகதீசா ! வருக நீயே !**

*கருத்துரை : -*

*திருச்சிற்றம்பலத்தில் அழகிய நடனம் புரிந்து இவ்வுலகைக் காக்கும் பரம்பொருளே ! நீ, தென்றற்காற்றாக மெல்ல வீசித் தென்னை மரக் கீற்றுகளில் இதமாக உரசுகின்றாய். இந்தக் காட்சியானது, தேனிலவுக்குச் செல்லும் புதுமணத் தம்பதியருள் தன் கணவனை மெல்ல வருடிக் கொண்டும், உரசிக் கொண்டும் பக்கத்திருக்கின்ற இளமையான மனைவியைப் போல உள்ளதாம். ஒருபுறம் அடர்ந்த காடுகளில் ஓங்கி நிற்கும் மரங்கள் ஒன்றோடொன்று உரசுவதால் உண்டாகும் நெருப்பை வீசுவாய், இந்தக் காட்சியானது பகைவர்கள் மீது தமிழ்மன்னர்களும், தமிழரசர்கள் மீது பகைவர்களும் வீசுகின்ற சினமாகிய நெருப்பு போல உள்ளதாம். மறுபுறம் கன்றுக்குட்டியைக் கண்டவுடன் பாசத்தால் கனிந்துருகித் தன் காம்புகள் நெகிழப் பாலைச் சுரக்கின்ற தாய்ப்பசுவைப் போல் அன்பு காட்டும் தாயாகவும் இருக்கின்றாய். இறைவா -! தஞ்சையிலே ஏக்கமுடன் காத்திருக்கும் எம்மைக் காக்கப் பிரகதீசப் பெருமானே ! வருவாயாக.*

*இதமான இன்பமும், பதமான பகைமையும், கருணை மிகுந்த தாயன்பும் என எல்லாமும் தருபவன் இறைவன். நெஞ்சைக் கொள்ளை கொள்ளும் பெருவுடையாரைத் தஞ்சையில் வழிபடுவோம்; வாழ்வில் வளம் பெறுவோம்.*

61. குழவியொன்று தாவுமந்தக் குளிர்மடியின் இதமதுபோல்

குடிமகிழ வரங்கள் தந்தே

தொழப்பெருகும் தொண்டரினம் தூமலர்தூய்ப் பாடியாடும்

பெருவுடையார் தஞ்சை வேந்தே!

உழவாரப் படையுடையார் உத்தமனார் நாவரசர்

உளமாரப் பணிந்து போற்றும்

மழபாடிப் பெரும்பதியுள் மாணிக்கமாய் வீற்றிலங்கும்

மதியுடையோய் வருக ஈண்டே!

*கருத்துரை :-*

*தஞ்சைப் பெருவுடையாரைத் தொழுது வணங்கத் தொண்டர்கள் கூட்டம் தூய்மையான மலர்களைத் தூவிப் பாடியாடுவார்கள். அவர்களுக்குத், தாவுகின்ற குழந்தைக்கு இதமான பாசத்தைத் தரும் தாயின் மடியில் கிடைக்கும் மகிழ்ச்சியைப்போல வேண்டுகின்ற வரங்களைத் தந்து மகிழ்விக்கும் பிரகதீசனே ! உன்னை உளமாரப் பணிந்து உழவாரப் பணியும் செய்து திருநாவுக்கரசர் வணங்கிப் போற்றுமாறு திருமழபாடி என்னும் பதியுள் இளம்பிறையணிந்து கோயில் கொண்டுள்ளாய். எம்பெருமானே ! மழபாடியுள் மாணிக்கமாய் வீற்றிருக்கும் நீ, தஞ்சைக்குப் பிரகதீசனாய்ப் பெருவுடையாராய் வந்து, வரம் தந்து, மகிழ்விக்க வருவாயாக !*

*தூய மனமுடைய அடியவர்க்குத் தாயன்புடன் பரிவு காட்டுபவர் தாம் பரம்பொருள். தொண்டு மனப்பான்மையும் தூய பக்தியும் ஒரு மனிதனை உயர்விக்கும். மாந்தரின் இன்றியமையாக். குணங்களாகத் தூய்மை, புனிதத்தன்மை அல்லது தெய்வீகத் தன்மை மற்றும் துணிவு என்பனவற்றைக் கூறலாம். ஆனால், இன்றைய மானிடர் ஆசை, சினம், ஆணவம் முதலானவற்றில் சிக்கித் தவிக்கின்றனர். இந்நிலை மாற இறைவனின் சிந்தை என்றைக்கும் இருத்தல் வேண்டும்.*

## 7. அம்புலிப் பருவம்

62. சுந்தர சோழனுக்கும் வானவன்மா தேவிக்கும்

சொந்தமெனச் சொலிப்பெருமை கொள்ளும் பாங்கில்

வந்துதித் துலகாண்ட வளமிக்க வேந்தன்

வண்கையன் இராசராசன் நம்பி வேண்ட

செந்தமிழ்ப் புரவலரின் சீரியதிரு மறையெடுத்துச்

சிரமுயர எழுப்பியசீர் கோவில் கொண்ட

சுந்தரன் பிரகதீசப் பெருமானே! பிணிபோக்கிச்

சுகமளிக்கும் அம்புலீ யாட வாவே!

*கருத்துரை : -*

*சோழர்குல விளக்கெனத் திகழ்ந்த சுந்தர சோழனுக்கும் அவன் மனைவி வானவன்மாதேவிக்கும் மகனாகப் பிறந்து சோழர் மரபினைக் காப்பதே தம் கடமையாய்க் கருதி வாழ்ந்த இராசராச சோழன் எல்லா வளங்களும் செழிக்குமாறு தஞ்சையை ஆண்டு வந்தான். வாரி வழங்கும் வண்மையுடன் உலகமே போற்றுமாறு ஆட்சி புரிந்தான். இராசராசனிடம் நம்பியாண்டார் நம்பி வேண்டிக் கொண்டதற்கிணங்கத் தில்லையில் நடராசர் கோயிலின் அறைக்குள்ளே பூட்டப்பட்டுச் செல்லரித்துக் கிடந்த பன்னிரு திருமுறைகளையும் கைப்பற்றித் தமிழர்க்கு வழங்கிச் சிவமதத்தவரின் அன்பையும் பாராட்டையும் பெற்றான். திருமுறைகளாம் சிவமறைகளை மீட்டதோடு உலகு போற்றும் வானுயர்ந்த பெரியகோவிலையும் எழுப்பச் செய்து ஈண்டு வீற்றிருக்கும் பிரகதீசப் பெருமானே ! எம்மைப் போன்ற மாந்தரின் மனப்பிணி, உடற்பிணிகளைப் போக்குதற்காக அம்புலியுடன் நீ விளையாட வருவாயாக !*

*உலகில் பிறக்கும் பிள்ளைகட்கெல்லாம் பெருமை பெறுதற்கேற்ற சூழல் அமைவதில்லை, நற்சூழல் அமைந்த இடத்தில் பிறக்கும் பிள்ளைகள் எல்லாம் பெருமைகளையும் பெறுவதில்லை. திருமுறை காத்த வேந்தர்தம் கோயிற்கு ஒரு முறை வந்தால் உயர்நிலைகிட்டும், பல முறை வந்தால் பரநிலை கிட்டும்.*

63. கருமேகம் வானிலே உருவாகும் போதிலே

நடமாடும் கான மயிலே!

திருவாகும் பாரிலே மழையாகும் போதிலே

வயலூரும் வான முகிலே!

உருளாத தேர்க்கொரு தெருவாதல் போலவே

உதவாத போர்க்கு முடனே

பொருளாகும் வாழ்க்கையைப் புலனாகத் துலக்கிட

அம்புலீ யாட வாவே!

*கருத்துரை : -*

*வானத்திலே திரண்டு வரும் மேகங்களைக் கண்டதும் மனமகிழ்ந்து மெய்சிலிர்த்துத் தோகை விரித்து மயில் நடனமாடுகின்றது. எல்லா வளங்களையும் கொண்ட இந்தப் பூவுலகில் மழை தொடர்ந்து பெய்யும்போது வயல் வெளிகளிலே சென்று பார்த்தால் கறுத்த மேகக் கூட்டம் வானம் முழுதும் பரவி வயல் வெளிகளிலும் ஏனைய நிலங்களிலும் ஊர்ந்து செல்கின்றது. இவ்வாறு ஒன்றின் செயல் ஒன்றிற்குப் பயனாகும் நிலையில் உள்ள பூமியில் மானிடர்களுள் பலர் உருளாத தேர்க்குத் தெரு இருப்பது போல எவருக்கும் உதவாதவர்கள், பயன்படாதவர்கள் என வாழ்கின்றார்கள். அத்தகையோர்க்கு வாழ்வின் நோக்கங்களையும் வழிமுறைகளையும் சிறப்பையும் புலப்படுத்தி அவர்களை உயர்நிலை கொள்ளச் செய்யும் தஞ்சைப் பிரகதீசனுடன் நிலவே! நீ விளையாட வருவாயாக!*

*தெருவிருந்தென்ன பயன் ! தேர் உருள வேண்டாமா! மானிடர் எந்த அளவிற்குப் பயனுள்ள வாழ்வு வாழ்ந்தார்கள்? என்பதே கேள்வி. மேகத்தின் திரட்சியால் மயில் மகிழ்வதும் மழைவளம் பெருக்கிட வயல்வெளிகளில் மேகம் சூழ்வதும் இயற்கையின் பொலிவு. அதுபோல, மனிதன் பிறர் வாழ்வு சிறக்கப் பாடுபடுவதும், மகிழ்வதும் கொள்கையாய்க் கொண்டிருந்தால் மனித நேயம் சிறக்கும்; மகேசன் அருள் பிறக்கும். மக்கள் தொண்டே மகேசன் தொண்டு.*

64. **பெண்ணாழி கையும் பிரியா தவனே!**

**பெரியநா யகியின் பெருந்துணை யோடே**

**உண்ணாழி கைக்குள் உத்தமன் நீயும்**

**ஒருதனி யிருந்தே உலகுபுரக் கின்றாய்**

**அண்ணாம லையார் அருந்தவக் கொழுந்தோ**

**டன்புடன் அம்புலீ! யாட வாவே!**

**கண்ணாயி ரங்கொள் கருணா கரற்குக்**

**கனிவாய் அம்புலீ யாட வாவே!**

கருத்துரை : -

தன்னுடலில் உமையாளுக்குப் பாதி தந்து ஒரு கணம் கூடப் பிரியாமல் இருக்கின்ற பெரும்பொருளே! தஞ்சாவூரில் பிரகதீசுவரனாய்ப் பெரிய நாயகியுடன் எழுந்தருளியுள்ளாய். ஆயினும் ஆலயக் கருவறையில் நீ ஒருவனாய்த் தனித்திருந்து உலகைப் புரக்கின்ற உத்தமனாய் இருக்கிறாய். திருவண்ணாமலையில் கோயில் கொண்டு கனலாய்க் காட்சி தரும் அண்ணாமலையாராகிய தவக்கொழுந்து தஞ்சாவூரிலே பெருவுடையாராய் இருக்கிறான். அவனோடு அன்புடன் விளையாட, அம்புலியே! நீ வருவாயாக! ஆயிரக்கணக்கான கண்களால் அகிலமெங்கும் பார்த்தவாறு காத்தருளும் கருணாகரனாம் பிரகதீசனுடன் அன்போடு விளையாட அம்புலியே! நீ வருவாயாக!.

பெண்ணுக்குச் சரிபாதி தந்தபோதும், பெரும்பொழுது உடனிருந்த போதும், கலந்தாலோசிக்கும் நிலையில் கரங்கோத்திருந்த போதும் முடிவெடுக்கும் சிந்தனையாற்றல் ஆடவர்க்கே உண்டு. சிவமே தன்னுடலில் உமைக்குப் பாகம் தந்தது. அந்தப் பெரும் பொருளைத் தஞ்சையிலே வீற்றிருக்கும் பெருவுடையாரை வணங்கிப் பேறு பெறுவோம்.

65. ஆழ்கடலில் முத்தெடுக்க மூழ்கிவரு வோர்களும்

அனுதினமும் தேக்கி வைத்த

பாழ்வினையைப் போக்குதற்குப் பரிந்துவிரை பேர்களும்

பரம்பொருளின் செம்பொற் பாதம்

வீழுமடி யார்களும் வேண்டியாங்கு செழித்து

விளைந்துவரு கதலி செந்நெல்

சூழ்நகரத் தஞ்சையமர் சுடர்விழிச் செல்வனுடன்

அம்புலீ யாட வாவே!

*கருத்துரை : -*

*ஆழமான கடலில் முத்தெடுப்பதற்காக, மூழ்கி மூச்சடக்குகின்ற மானிடர்கள் ஒரு புறமும், தாம் வாழ்நாளில் சேர்த்த பாவங்களைப் போக்குதற்காக இறைவா ! உன்னை வேண்டி நின் கோயில் வாசலுக்கு விரைந்து வந்தடைகின்ற மக்கள் ஒரு புறமும், எந்நாளும் உன்னுடைய சிவந்த பொன்மயமான திருவடியில் வீழ்ந்து கிடந்து தம் பக்தியைத் தூய்மையான நெறிகளில் வெளிப்படுத்தும் அடியவர்கள் ஒருபுறமும், தேவையான அளவை விட அதிகமாகச் செழித்து விளைந்து காணப்படும் வாழை, கரும்பு, நெல் முதலியவை ஒருபுறமும் என நாற்றிசையும், சூழ வீற்றிருக்கும் சுடர்வீசும் விழிகளையுடைய தஞ்சையம்பதிப் பிரகதீசனுடன் அம்புலியே ! நீ விளையாட வருவாயாக!*

*தம் வினையறுக்க வேண்டுவோரும், தம் பிறப்பறுக்க வேண்டுவோரும் பெருவுடையாரின் திருமுன்னர் மண்டியிட்டுக் கிடக்கின்றனர். கடற்காற்று, வயற்காற்று என்று வளிக்கடவுள் வலம் வரும் எழிலோடு அமைந்துள்ளது தஞ்சைப் பெருங்கோயில். ஆங்கே பிரகதீசன் கோயில் கொண்டுள்ளான். அவன் பெரும்புகழ் பாடிப் ப்ரவசமடைவோம்.*

66. நைந்தாரின் நலமுயர நான்மறையின் திறம்விளங்க

நாட்டகத்தே கோயில்பல கண்ட தேவே!

ஐந்தாறின் எழுத்துமுகம் அறிந்தாரின் நலந்திகழ

அவருளமே கோயிலெனக் கொண்ட கோவே!

பழகாத ஊர்க்குவழி யறியாமல் திகைக்கின்ற

பண்பாளர் துன்பங்கள் போக்கும் வேந்தே!

அழகான தஞ்சையினில் அதிகாரத் தோடமர்ந்த

அண்ணலே! அம்புலீ யாடு வாயே!

*கருத்துரை : -*

*வாழ்க்கையில் நலிவுற்று வாடும் அடியவர்கள் நலம் பெற்று உயர் வாழ்வு வாழவும், நான்கு வேதங்களில் கூறப்பெற்ற கருத்துக்களின் உயர் நோக்கம் மாந்தர்க்கு விளங்கவும் இப்புவியில் பல திருத்தலங்களில் கோயில் கொண்டுள்ள தேவனே! . ஐந்தெழுத்து, ஐந்து முகம், ஆறெழுத்து, ஆறுமுகம் ஆகியவற்றின் சிறப்பறிந்த பக்தர்களின் வாழ்வு நலம்பெற அவர்களுடைய உள்ளத்திலும் கோயில் கொண்டுள்ள தெய்வமே ! பழக்கமில்லாத ஊருக்கு வழியறியாமல், யாது செய்வதென அறியாமல் திகைக்கின்ற பண்புமிக்க சான்றோர்களின் துன்பங்களைப் போக்கும் பேரரசனே ! இயற்கை எழில் சூழ்ந்த தஞ்சையில் அமர்ந்து ஆட்சி செய்யும் பிரகதீசனே ! அம்புலியோடு விளையாடி மகிழ்வாயாக!*

*நமசிவாய எனும் ஐந்தெழுத்தும், பஞ்ச பூதங்களாகிய ஐந்து முகங்களும் கொண்ட சிவபெருமானையும், சரவணபவ எனும் ஆறெழுத்தும், ஆறுமுகங்களும் கொண்ட முருகப் பெருமானையும் பற்றிய பெருமைகள் அனைத்தும் அறிந்தவர்களே அடியவர்கள் ஆவார்கள். திசை தெரியாமல், திண்டாடித் திகைப்போருக்குத் திசையாய் நிற்பவன் இறைவன். துன்பங்கள் நீங்க மக்கள் தஞ்சைப் பெருவுடையாரைத் தொழுதல் சிறப்பு.*

67. தெருப்புற வாழ்வில் தினந்தொறும் திளைப்பவர்·
தெரியா தவர்போல் மிகுபொருள்
இருப்பவர் எனச்சொலும் வலியவர் கூடி
யிலாதவர் தமையெலாம் வீழ்த்தி,
விருப்புற உழைத்துப் பிழைப்பவர் வயிற்றை
வெற்றிட மாக்கு வோரைப்
பொருப்பமர் கோமான் திருத்திட வேண்டி
அம்புலீ யாட வாவே!

கருத்துரை : -

அன்றாட வாழ்விற்கு நாள்தோறும் பலவாறு அல்லற் படுகின்ற மக்களைப் பற்றி அறியாதவர்களைப் போல மேம்போக்காக இருந்து பல வழிகளில் மிகுதியான பொருளைச் சேர்த்துப் பணக்காரர் எனச் சொல்லிக் கொள்ளும் பணவலிமை படைத்தவர்கள் கூடிப் பொருளின்றி வறுமையில் வாடும் மாந்தரை நசுக்குவதையும், உழைத்து வாழ வேண்டும் என்ற மிக உயர்ந்த நோக்கத்துடன் விரும்பி உழைப்பவரின் பொருளையும் சுரண்டி அவர்தம் வயிற்றை உணவில்லாத வெற்றிடமாக்குவதையும் பலர்தம் தொழிலாகக் கொள்கையாகக் கொண்டு செயல்பட்டு வருகின்றனர். அவர்களையெல்லாம் திருத்தி நாட்டை நலப்படுத்த இறைவா! கைலாயமலை மீதமர்ந்த தெய்வமே! தஞ்சையிலே பிரகதீசனாய் அம்புலியுடன் மகிழ்ந்து விளையாடுவாயாக!

உலகில் அன்றாடம் உழைத்தால்தான் பலர்வீட்டில் அடுப்பெரியும், இல்லாமை எனும் தீயும் என்றென்றும் எரியும். ஆனாலும் வீட்டையே எரியவைத்து வேடிக்கை பார்ப்பவர்கள், கொடூரப் போக்குடையவர்கள், தாம் வாழப் பிறர் வீழ விரும்பும் தரங்கெட்ட மனத்தவர்கள். பெருவுடையாரைத் தொழுதாலே இந்தத் தீய மனம் மாறிப் பெருங்குணவான்களாகவும், பெருங்கணவான்களாகவும் வாழலாம்.

68. **கத்துகடல் கொந்தளிப்பைக் கரங்கள் தாம் தடுக்குமோ?**

**காவிரியின் நீர்ப்பெருக்கைக் கல்லணைதான் காக்குமோ?**

**சித்தர்களின் சிந்தையது சிவமதனை வெறுக்குமோ?**

**சீர்கெட்ட மாந்தருளச் சிந்தைநலம் கொடுக்குமோ?**

**தத்துவத்தின் நிறைபொருளைத் தரணியிது மறுக்குமோ?**

**தஞ்சையில் பெருவுடையார் தரும்வரங்கள் கசக்குமோ?**

**வித்தகன்மேல் காதலுறின் வேறெதுவும் தடுக்குமோ?**

**விளையாட்டுத் தலைவனுடன் அம்புலீ! ஆட வாவே!**

*கருத்துரை : -*

*ஒலியோடு அலை வீசுகின்ற கடலின் கொந்தளிப்பைக் கைகளால் தடுக்க இயலாது. கரைபுரண்டு வரும் காவிரியின் வெள்ளம் அளவு மீறும் போது கல்லணையாலும் காக்க இயலாது. பழங்காலச் சித்தர்கள் சிவனைப் பற்றிய சிந்தையை வெறுத்ததில்லை. சிறப்பில்லா மனிதரின் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்கள் நன்மைகளைத் தாரா. தத்துவக் கூறுகளில் நிறைந்த கருத்துக்களை இவ்வுலகம் மறுக்காது. இவைபோலத் தஞ்சையிலே எழுந்தருளியிருக்கும் பெருவுடையார்மீது அன்பு வைப்பதை வேறெந்த சக்தியும் தடுக்க முடியாது. பிரகதீசப் பெருமான் தரும் வரங்கள் இனிமையைத் தருமேயன்றி கசப்பைத் தராது. ஆதலின், விளையாட்டுத் தலைவனாம் பிரகதீசனுடன் விளையாட நிலவே ! நீ வருவாயாக.*

*அலையின் ஆற்றலையும், காவிரியின் பெரு வெள்ளத்தையும் தடுக்க இயலாது. அதுபோன்று, இறைவன் மீது நாம் கொள்ளும் பேரன்பை யாராலும் தடுக்க முடியாது. தடுக்க முடியா அளவிற்கு ஆழமான பக்தி பேரானந்தப் பரவசத்தைத் தரும்.*

69. காற்றோடு வெப்பத்தை நீரோடு நிலந்தன்னில்

காண்கின்ற உயிர்கள் எல்லாம்

கூற்றான தடைமீறி நூல்கற்றார் அறிவேபோல்

குளிர்வான நோக்கி ஓங்கும்

போற்றாரும் நண்பருமாய்ப் பொதுமக்கள் உறவினரோ

டிணைந்தென்றும் வாழ்ந்த போதும்

ஆற்றியெமைத் தேற்றுகிற பெருவுடையார் அருள்வேண்டும்

அம்புலீ! நீ ஆட வாவே!

*கருத்துரை : -*

காற்றையும், வெப்பத்தையும், நீரையும் நிலத்திலே தேவையான அளவில் பெற்று வாழும் உயிர்கள் எல்லாம், கூற்றுவனான எமனின் தடையை மீறிப் பல நூல்கள் கற்றாருடைய அறிவு ஓங்குதல் போல் குளிர்ந்த ஆகாயத்தை நோக்கி உயர்ந்து வளர்கின்றன. அதே போன்று பொது மக்கள் தம் வாழ்க்கையில் நண்பர், பகைவர் எனப்பெற்று உறவினரோடும் சேர்ந்து எப்போதும் வாழ்ந்து வருகின்ற வேளையிலும், எம்மையெலாம் துன்பமடைகின்றபோது ஆறுதல் தந்து போற்றுகின்றவராகிய தஞ்சைப் பெருவுடையாரின் அருள் நமக்கு எப்போதும் வேண்டும். இந்த அருளை அன்புடன் வழங்கச் செய்வதற்காக அம்புலியே ! நீ வந்து பிரகதீசனுடன் விளையாடுவாயாக!

உயிர்கள் அனைத்தும் பஞ்சபூதங்களால் ஆனவை; அவற்றால் வாழ்பவை; காற்று, நீர், வெப்பம் என்பனவற்றைப் பெற்று நிலத்தில் வாழ்ந்து வானை நோக்கி வளர்கின்ற இயற்கை அமைப்பில் இதனை அறியலாம். பஞ்சபூத நாயகன் பஞ்சாட்சரப் பரமன்; அவனைத் தஞ்சையில் வணங்கினால் பஞ்சமும் நீங்கி, அச்சமும் அகன்று இன்பமாய் வாழலாம்.

70. கருப்புவில் வீரனைக் காமனென் பேரனைக்

கடிசினத் தாலெரி கனல்விழி நாதனே!

மருப்புள மான்மறிக் கரமதன் துடியொலி

மனம்புகத் துயர்கெடும் மாலயற் கீசனே!

இருப்புளச் சரக்கினை இறக்கியுன் திருவடி

இயைந்திடத் தொழுபவர் இயக்குநற் பாகனே!

பொருப்புள திருப்பணி விருப்புடன் முடித்துடன்

புறப்படு அம்புலி யாடுதற் காகவே!

கருத்துரை : -

கரும்பை வில்லாகக் கொண்ட, காமன் என்னும் பெயரை உடைய மன்மதனைச் சுடர்விழித் தீயால் சுட்டெரித்த தலைவனே! நீ கையில் கொண்டிருக்கும் கொம்புடைய மானையும், உடுக்கையின் ஓசையையும் உள்ளத்தால் நினைத்தாலே அடியவர்களுக்குத் துன்பமெலாம் அற்றுப்போகும். திருமாலுக்கும் பிரமனுக்கும் மூலக்கடவுளே! பக்தர்களின் மனத்தில் நிறைந்துள்ள பக்தி முழுவதையும் நின் திருவடியில் இறக்கி வைத்துத் தொழுமாறு அவர்களை இயக்குகின்ற பாகன் நீ. கைலாய மலையில் நீ ஆற்ற வேண்டிய பணிகள் இருப்பின் அவற்றை அன்புடன் நிறைவேற்றி முடித்து விட்டுத் தஞ்சைக்கு அம்புலியுடன் விளையாடுதற்காகப் புறப்பட்டு வருகவே!

காமனை எரித்தாற்போன்று காமம் மிக்காரைக் கடவுள் துயரமெனும் தீயால் எரித்திடுவார். மனத்தில் தூய பக்தியை நிரப்பித் தொண்டு செய்வார்க்குத் துன்பமில்லை.

71. ஒட்டுவார் படையுடனே ஊர்போற்றும் வளமிருப்பின்
ஒருவரும் சேர்க்கா விட்டால்
வெட்டுவார் பகையுடனே வீண்பழி வீசிவீசி
வேறெவரும் சேரா வண்ணம்
தட்டுவார் தம்கையில் கிடைத்தவற்றைத் தரணிதூற்றத்
தரங்கெட்டார் தம்மை மாற்ற
மட்டுவார் குழலார்தம் மனங்குளிரச் செல்வனோடே
அம்புலீ யாட வாவே!

கருத்துரை : -

ஊர்போற்றும் அளவிற்குச் செல்வ வளமிருந்தால் எல்லாரும் தம் சுற்றத்துடன் வந்து உறவாடுவர். யாரும் அவரைச் சேர்த்துக் கொள்ளாவிட்டால் பகைமை பூண்டு பழிகள் சுமத்தித் தம்மைச் சேர்க்காதவருடன் வேறெவரும் சேராதவாறு பிரித்திடுவர். தம்கையில் கிடைத்தவற்றையெல்லாம் பிறர் அறியாமல் தமக்குரியவையாக்கிக் கொள்ளும் தரங்கெட்ட மாந்தரும் உளர். இவர்களையெல்லாம் திருத்திட, மலர்களில் தேன் நிறைந்துளதால் வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய பெண்களின் உள்ளத்தைக் குளிர வைக்கின்ற செல்வனாம் பிரகதீசனுடன் நிலவே ! நீ விளையாட வருவாயாக!.

உணர்ச்சி தான் நட்பாம் கிழமை தரும், செல்வத்திற்காகப் பழகுதல் அற்றநீர்க் குளப்பறவை போலாகி விடும். பழிசேர்க்கும் குணமும், பழிதீர்க்கும் மனமும் சிறந்த பண்பாகா.

## 8. சிற்றில் பருவம்

72. நோயிலே பட்டுமனம் வெந்து நொந்து
நோன்பெனப் பசியிலே காலம் போக்கித்
தீயிலே நின்றுகொண்டு தென்றல் காற்றைத்
தேடிவரும் தெளிவிலா மாந்த ரெல்லாம்
கோயிலே கதியெனக் கொண்டு விட்டால்
குடிலுமோர் கோபுரமாய்த் தோன்று மன்றே
வாயிலே பெருவுடையார் வாழ்த்தி ஏந்தும்
சிற்றிலைச் சிதையேலே தேவ தேவே !

*கருத்துரை : -*

*இன்றைய வாழ்வில் மக்கள் பலர் நோய்களுக்கு ஆளாகி மனம் துயருற்று நொந்து நோன்பாகிய விரதம் என்னும் பேரில் பசியால் வாட்டங்கொண்டு தீயின் மீது நின்றவாறு தென்றல் காற்றைத் தேடுவதைப் போன்று தெளிவில்லா மனத்தராய் வாழ்கின்றனர். அத்தகையோர் வாழ்வு சிறப்புற வேண்டுமாயின் பெருவுடையார் கோயிலே கதியென்று நம்பி நாளும் வணங்கி வந்தால் அவர்கள் வீடுகள் பறந்து போவதுடன் அவர்களுடைய குடிசை வீடுகள் கோபுரங்களாக மாறக் கூடிய வழி பிறக்கும். அடியவர்எம் வாயாலே தஞ்சைப் பெருவுடையாராம் பிரகதீசனே ! நின்னை வாழ்த்தி வணங்குகின்றோம். தெய்வமே ! எங்கள் சிறு வீடுகளைச் சிதைக்க வேண்டாம்.*

*துன்பத்தில் வாழ்ந்து கொண்டு இன்பத்தை எதிர்நோக்கி வாழும் மனிதர் பலர். தீயில் காயும்போது தென்றல் தேடும் மன நிலை மாறி வாழ்வில் வசந்தமே நிலைத்திருக்கச் தஞ்சாவூர்ப் பெருவுடையாரைத் தொழுதிடுவோம்.*

73. நெற்றியின் கண்ணெம் நெஞ்செலாம் இனிக்க

நின்றகலாச் செஞ்சடை யோய்நினைச்

சுற்றிமெல் லணியாய்ச் சுடர்விழி மேனியில்

சொல்லரு நல்லெழில் அரவும்

பொற்றிரு வடியும் புகழ்த்திரு முடியும்

பூவிழி யருளும் அன்றேல்

மற்றெமக் குறவிலை மன்னவா மறவேல் !

மதியிலேம் சிற்றிலைச் சிதையேல் !

*கருத்துரை :-*

*நெற்றியில் உள்ள கண் அடியவர்களாகிய எங்கள் நெஞ்சமெல்லாம் நிலையான நினைவாக நீங்காதிருந்து மகிழ்ச்சியினை வழங்குகின்ற சிவந்த சடையினை உடைய இறைவா ! நின் பொன்சுடர் வீசும் மேனிக்கு அழகாகச் சுற்றிக் காட்சி தரும் சொல்லரும் சிறப்பு வாய்ந்த அழகிய பாம்பும், பொற்பாதங்களும் கங்காதேவி, இளம்பிறை, கொன்றைமலர் ஆகியவற்றை அரவம் சூழ அணிந்துள்ள புகழ்மிக்க திருமுடியும், பூப்போன்ற மென்மையான அழகிய கண்களும் தவிர எமக்குச் சுற்றம் எவருமில்லை. தெய்வமே ! உமையே கதியாய்க் கருதி வாழ்கின்ற எம்மை மறந்துவிடாதே ! அறிவில்லாத எம்முடைய சிறிய இல்லத்தை விளையாட்டு நோக்கிலே சிதைத்துவிடாதே !*

*சுற்றிப்படர்ந்து சூழ்துயர் தரும் சுற்றமும், எட்டி உதைத்து ஏளனப்படுத்தும் பண முதலைகளின் பாதமும், எந்நாளும் இறைவனை வணங்காத் தலையும், கருணை என்பது சிறிதுமில்லாக் கண்களும் தேசத்திற்குத் தேவையில்லை. இறைவனை வணங்கிச் சிந்தையைத் தூய்மைப் படுத்தி நல்லெண்ணங்கள் கொண்டு நலமுடன் வாழப் பிரகதீசனின் திருவடி போற்றுவோம்.*

74. மறுபாதி உடல்தந்து மதிநீர் தாங்கி
மாநகரத் தஞ்சையிலே வீற்றி ருந்து
குறும்பேறி மதமேறிக் கொடுமை செய்யும்
கூட்டத்தின் குணமாறி வாழ்க்கைப் பாதை
நறுந்தேனின் சுவைமணம் போல் நாளும் மாற
நற்சிந்தை மாந்தர்க்குப் பெருக நல்கிச்
சிறுபான்மை பெரும்பான்மை பேதம் நீக்கிச்
சிறியேமின் சிற்றிலினைச் சிதையேல் தேவே !

*கருத்துரை : -*

*எம்பெருமானே ! உமையம்மைக்கு உடலில் மறுபாதியைப் பாகமாய்த் தந்து பிறை நிலவையும் கங்கை நதியையும் சடையில் தாங்கித் தஞ்சை மாநகரிலே எழுந்தருளியிருக்கின்றீர். ஆணவத்தாலும் ஆடம்பரத்தாலும் தேவையற்ற குறும்புகளும் கொடுமைகளும் செய்கின்ற கூட்டத்தின் குணம் மாறி அவர்களுடைய வாழ்க்கைப் பாதை நறுந்தேனின் சுவையைப் போன்று நலமிக்கதாக அமைந்து நாளும் உயர்ந்த சிந்தனைகள் பெருகுமாறு அருள் வழங்குகின்றீர். மாந்தரிடையே பெரும்பான்மை சிறுபான்மை இனத்தவர் என்னும் வேறுபாடுகளை நீக்குக! பிரகதீசனே! அடியவர்களாகிய எங்கள் சிறிய இல்லங்களைச் சிதைக்க வேண்டாம்.*

*சுவைமிக்க . தேனுக்குப் · பாதுகாப்பு தேனூறும் மலர்களிலிருந்து கொண்டு வந்து சேர்த்த தேனீக்கள். உமையாளைப் பாதுகாக்கும் மகேசன் உலகைக் காக்கும் பணியைச் சிறப்பாகவே செய்கிறான். பிரகதீசனின் பேரருள் கிட்டுமாயின் பெருவாழ்வு அமையும்.*

75. பட்டாடைப் பகட்டுக்குப் பலகாலும் விழைவோர்கள்
பசிகொண்டோர் நிலைகாண வரவேண்டும்
எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விட்டார்க்குக்
கிட்டாத தொலைவுக்குச் செலவேண்டும்
தொட்டாலும் தீதென்று துயர்செய்யும் வலியோர்க்குத்
தொண்டாற்றும் மனமாற்ற நிலைவேண்டும்
விட்டாலும் விலகாத விடையேறும் சடையானே!
விளையாட்டாய்ச் சிற்றில்தனைச் சிதையேலே!

கருத்துரை : -

எந்நாளும் பகட்டான வாழ்வுக்கும் பட்டாடைச் சுகத்துக்கும் ஆசைப்பட்டு வாழும் ஆடம்பர மனிதர்கள் அன்றாடம் பசியில் வாடும் எளிய மக்களின் நிலையினையும் அறிந்து அவர்கட்கு உதவ முன்வரவேண்டும். தமக்குக் கிடைக்காத எந்த ஒன்றையும் நினைத்து ஏக்கமுடன் வாழும் மானிடர், எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விடுபவர்களைப் போலாவர். அத்தகையோரை ஒதுக்கி அவர்கள் அணுக முடியாத தொலைவுக்கு அகன்றிருந்து உழைத்துப் பெறும் உயர்ந்த நோக்கத்துடன் வாழ ஒவ்வொருவரும் பழக வேண்டும். தீண்டினாலே தகாதவர் என்றும் தீமை தரும் என்றும் கருதி ஏழையர்க்கும் பிற்பட்டோர்க்கும் துன்பம் இழைக்கின்ற செருக்குடையோருக்குப் பணிவிடை செய்யும் மனநிலை மாறிட வேண்டும். அன்றேல் அவ்வலிமை உடையோர்க்கு மனமாறித் தொண்டு செய்யும் நிலைக்கு அவர்கள் வரவேண்டும். மறந்து விட்டாலும் வணங்கா விட்டாலும் எம்போன்றோரை விட்டு விலகாத எம்பெருமானே! விளையாட்டாக எண்ணி எம்முடைய சிறிய வீடுகளைச் சிதைத்து விடாதீர்.

பகட்டான வாழ்வை மட்டுமே விரும்புவோர் பசியுடையார் மாட்டுத் திரும்புவோர் ஆகுக; இயலாமை கருதி முயலாமை தவிர்த்திடுக; வேண்டாமை கருதித் தீண்டாமை கொள்ளற்க; விடையேறும் சடைமுடியான் பிரகதீசனை மறவற்க.

76. காற்றோடு நீவந்து மோதும் போதும்

கனலாகக் கதிர்வீசிக் காயும் போதும்

ஊற்றாகப் பெருக்கெடுத்து ஓடும் போதும்

உழுவாரைத் தாங்கியருள் நிலமாம் போதும்

சாற்றுபுகழ் மீனுலவு வெளியாம் போதும்

சங்கரனே ! நின்னினைவே நெஞ்சில் மோதும்

போற்றுதிருத் தஞ்சையிலே கோயில் போதும்

பொற்கரனே ! எம்சிற்றில் சிதையேல் நீயே !

கருத்துரை : -

இறைவா ! காற்றாக நீ வந்து ஒவ்வொரு பொருளின் மீதும் மோதுகின்ற போதிலும், நெருப்பாக ஒளிவீசி வெப்பத்தை வீசுகின்ற போதிலும், நீரூற்றாகப் பெருக்கெடுத்து ஓடுகின்ற போதிலும், தம்மீது கலப்பையால் உழுகின்ற உழவர்களைத் தாங்குகின்ற நிலமாயிருந்து அருளுகின்ற போதிலும், புகழ்ந்து பேசப்படுகின்ற விண்மீன்கள் பல உலவுகின்ற வான வெளியாய் இருக்கின்ற போதிலும் உன்னைப் பற்றிய நினைவுகளே எம் நெஞ்சில் வந்து மோதுகின்றன. பிரகதீசனே ! போற்றுதற்குரிய புகழ்மிக்க தஞ்சையிலே பெரிய கோயில் உனக்குப் போதுமன்றோ ! ஆதலின், நீ எம்போன்ற எளியவரின் சிறிய வீடுகளைச் சிதைத்து அழித்திட வேண்டாம்.

பஞ்சபூத நாயகன் பாமரரின் காவலன், பெரிய கோயில் பரம்பொருள் பிரகதீசன்; பேரருள் சுரக்கும் கொடைவாசன்; அன்னவன் திருவடி அனுதினம் வணங்கிடின் அல்லல் எலாம் அவ்வப்போதே அகன்று விடும்

77. ஏழூர்க்கும் நாயகமாய் ஏழிசைக்கும் தாயகமாய்
எழுந்தருளி ஆட்சி செய்தே
வாழூர்க்கும் வழிகேட்கும் வஞ்சமிலா நெஞ்சினர்க்கு
வாயுணர்த்தும் வள்ளல் நீதான் !
பாழூர்க்கு வழிதேடிப் பலவினைகள் தினம் சூடும்
பாவியேமை ஆட்கொண் டன்பில்
ஆழூர்க்குத் தலைநகராம் தஞ்சையெம் பெருமானே !
அணிசினத்தால் சிதையேல் சிற்றில் !

*கருத்துரை : -*

*திருவையாறு, திருநெய்த்தானம், திருப்பூந்துருத்தி, திருக்கண்டியூர், திருவேதிக்குடி, திருச்சோற்றுத்துறை, திருப்பழனம் ஆகிய ஏழு திருத்தலங்களிலும் சிவபெருமான் கோயில் கொண்டு திருவிழா காணும் நாதனாக, ஏழிசைகளும் தோன்றுவதற்கு அடிப்படைத் தாயகமாய்த் திகழும் தெய்வமாக வீற்றிருந்து ஆட்சி செய்யும் இறைவா! மானிடர்தாம் நலமுடன் வாழ வழி கேட்டு வஞ்சமில்லா நெஞ்சத்துடன் வணங்குவோர்க்கு அருள் பொழியும் வள்ளலாகிய கடவுள் நீ! பாழ்பட்டுப் போகுமாறு வாழ்க்கையில் பல பாவங்களை நாளும் செய்யும் எம்போன்ற பாவியரை ஆட்கொண்டு அன்பில் ஆழ்த்திப் பக்தி செலுத்த, மிகுந்த அன்புடையோர் வாழும் தஞ்சையெனும் தலைசிறந்த நகரில் கோயில் கொண்டுள்ள எம்பெருமானே! பிரகதீசனே! நினக்கு உண்டாகும் அன்பான சினத்தாலே எம் சிற்றிலைச் சிதைத்து விடாதே!*

*நதி சூடிய நாயகன் காவிரியெனும் நதிக்கரையில் தஞ்சாவூரை ஒட்டி அமைந்த ஏழு ஊர்களிலும் வீற்றிருந்து ஒரே காலத்தில் திருவிழா காணுகின்றார்; சப்தஸ்தானத் திருவிழா என்று கூறுவர்.*

78. பாடகப்பைந் தமிழ்ப்புலவர் நாவினிலும், நன்னூலைப்
பன்னெடுநாள் பசிபொறுத்துப் பயின்றுபெறு சுவையினிலும்
ஊடகமாய் நிறைந்திலங்கும் உயர்பொருளே ! வாளைபாய்ந்து
நறுங்கதலிக் கனிசிதறும் ஒள்ளியசீர்த் தஞ்சைதனை
வீடகமாய்க் கொண்டியங்கும் கொன்றைமலர்ச் சடையோனே !
வேங்கையென ஓங்கிடவே விழைவோர்க்கும் வரமளிக்கும்
ஆடகச்சீர்ப் பெருந்தவமே ! அன்புருவே ! அழகுமுகச்
சிறுபிள்ளை விளையாட்டாய்ச் சிற்றிலினைச் சிதையேலே !

கருத்துரை : -

செய்யுள் இயற்றும் உள்ளம் கொண்ட தமிழ்ப்புலவர் நாவினிலும், பல காலமாகப் பசியைப் பற்றிக் கவலை கொள்ளாமல் பட்டினியாய் இருந்து நல்ல பல நூல்களைப் பயின்று பெறும் பொருட்சுவையிலும் ஊடுருவி உயர்பொருளாய்த் திகழும் இறைவனே! மருத நிலத்தில் உள்ள நீர்நிலைகளில் திரியும் வாளை மீன்கள் பாய்வதால் சிதறுகின்ற சுவையும் மணமும் மிக்க வாழைக்கனிகள் நிறைந்த சிறப்புடைய தஞ்சையைத் தம் இருப்பிடமாகக் கொண்டிருக்கும் கொன்றை மலர்ச் சடையையுடைய பிரகதீசப் பெருமானே! வேங்கை மரம், வேங்கையெனும் விலங்கு போன்று புகழில் ஓங்கிட விரும்பும் மாந்தர்க்கு வேண்டிய வரங்களை வழங்கும் அம்பலவாணனே! அன்பின் திருவுருவே! நீ அழகிய முகத்தைக் கொண்ட சிறுபிள்ளையாக விளையாட்டாய் வந்து எம் சிறு இல்லங்களைச் சிதைத்து விடாதே!.

தமிழ்ப்புலவராய்த், தமிழ்ச் செய்யுள்களின் பொருட்சுவையாய்க், கனிகளாய், அவற்றின் சுவைகளாய் இருப்பவன் இறைவன். அவனை நாள்தோறும் வணங்கிச் சுவைத்தின்பம் கொள்வோம்.

79. கொடுத்தாண்ட பாலமுதம் குழையவாங்கிக் குழந்தையாய்க்

கோயில்தொறும் சம்பந்தரை ஈர்த்தாய் !

தடுத்தாண்டு சுந்தரரைத் தமிழ்த்தொண்டில் தாம்சேர்த்தாய் !

மாணிக்க வாசகர்க்கு வேகம்

கெடுத்தாண்ட வேந்தனென நின்றொளி விளக்காகிக்

காணிக்கை வாசகத்தைப் பெற்றாய் !

படுத்துருண்டு தொழுதபெரு நாவரசைக் காத்தாய் !

பரம்பொருளே ! சிற்றில்சிதை யேலே !

கருத்துரை : -

உமையம்மை வழங்கிய ஞானப்பாலை உண்டு, இளவயது மூன்று முதற்கொண்டே நாட்டில் உள்ள எல்லாக் கோயில்களுக்கும் வந்து தமிழ்ப்பாடல்கள் பாடச் செய்து இன்புறுவதற்குத் திருஞானசம்பந்தரை ஈர்த்த தேவனே! சுந்தரரின் திருமண நாளன்று தடுத்து அவரை ஆட்கொண்டு தமிழ்த் தொண்டில் ஈடுபடச் செய்த இறைவனே! வேகம் கெடுத்தாண்ட வேந்தன் எனப் பாடிப் பரவசமடைய மாணிக்க வாசகர்க்கு ஒளிவிளக்காக நின்று உதவி செய்து திருவாசகத்தைக் காணிக்கையாகப் பெற்ற கறைக்கண்டனே ! பழுத்த பழமாக முதுமை அடைந்த போதும் தளராமல் தள்ளாடி, மண்டியிட்டுப் படுத்து உருண்டு வந்து தன்னைப் பல தலங்களில் தொழுது வணங்கிப்பாட அருள் வழங்கித் திருநாவுக்கரசரைக் காத்த கருணாநிதியே! பெரும்பொருளே! பிரகதீசனே! எல்லாருக்கும் பாதுகாப்பளித்த நீ எம் சிற்றிலைச் சிதைக்காமல் எம்மையும் பாதுகாப்பாயாக !

இறைவன் தூய அன்புடையாரை ஆட்கொள்ளும் அருளாளன்; உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசும் உறவை விரும்பான்; துயர் வரும் போதும் தூய்மையினின்று பிறழாமல் வாழ்வாரைப் பெரிதும் போற்றும் பேராளன். மனத்துக்கண் மாசற்றவராய் மலையரசனை மனத்துள் பதிப்போம்; உயர்வோம்.

80. திரையுலாம் பரவையும் தென்வரைப் பொதிகையும்

தெளிவுலாம் புனல்தரும் தென்னக நதிகளும்

விரையுலாம் மலர்களும் விடையுலாம் பசுக்களும்

வினையுலாம் உயிர்களும் விளைவுலாம் பயிர்களும்

உரையுலாம் பனுவலும் உனதிரு வடிதொழும்

உயர்வுலாம் மாந்தரும் உணர்விலா திருந்திடின்

மரையுலாம் மான்கரத் திறைவனே! நுதல்விழி

மறைவிலாம் சினத்தினில் சிற்றிலைச் சிதைத்திடேல்!

கருத்துரை : -

எம்பெருமானே! அலைகள் உலவும் கடலும், தென்னாட்டுப் பொதிகைமலையும், தெளிந்த நீரை வழங்குகின்ற தென்னக ஆறுகளும், மணம் வீசுகின்ற மலர்களும், காளைகளோடு திரியும் பசுமாடுகளும், தீவினைக்காளாகி வருந்தும் உயிரினங்களும், நல்ல விளைவுகளைத் தருகின்ற பயிர்வகைகளும், தெளிந்த உரைகளைக் கொண்ட செய்யுள் நூல்களும், நின்னுடைய திருவடிகளிரண்டையும் தொழுது வணங்குகின்றன. புள்ளிகளைக் கொண்ட மானைக் கரத்திலேந்திய இறைவா! உயிரினங்களுள் உயர்வுடைய மானிடர்கள் நல்லுணர்வை இழந்து வாழ்ந்தால் நீ நெற்றிக்கண்ணில் மறைத்துள்ள சினத்தியை வெளிப்படுத்தி எம் சிறிய வீட்டைச் சிதைத்து விடாதே !

உலகில் எல்லாமும் அவனருள் பெற்றுச் சிறப்புற இயங்குகின்றன. ஆனால் மானிடர் மட்டும் ஏனோ மறந்து திரிகின்றனர்.

81. பாடுபட்டுத் தேடுவதும் பக்கத்தார்க்குப் பயனுறாமல்
படுகுழியில் புதைப்பதுவும் நமது நாட்டுக்
கேடுகெட்ட மானிடரின் கீழ்ச்செயலென் றோதிவிட்டுச்
சென்ற முன்னோர் பதைத்ததுவும் எண்ணியெண்ணிக்
கூடுவிட்டிவ் வாவிபோம்நாள் என்றென்றே வருந்துவனே!
பெருவுடையார் திருவுடனே பொன்விளைத்து
மாடுகட்டிப் போரடித்தால் மாளாத தஞ்சையினில்
சிறியேமின் சிற்றில்தனைச் சிதையேலே !

*கருத்துரை :*

*பாடுபட்டுப் பொருளைத் தேடுவதும், அவற்றைத் தாமும் பயன்படுத்தாமல் பிறருக்கும் பயனுறச் செய்யாமல் ஆழமான குழியில் புதைத்து வைப்பதும் கேடுகெட்ட மானிடரின் செயலாகும் என்று தமிழ்ச் சான்றோர்களுள் ஒருவரான ஔவையார் சொல்லிச் சென்றதைக் கற்றும் மக்கள் மாறாத நிலையில் இருப்பது கண்டு அறிஞர்கள் மனம் வருந்தி வாழ்வதும், இந்நிலையைக் கருதி உடலைவிட்டு உயிர் எப்போது பிரியும்? மரணம் எப்போது வரும்? இருப்பதைவிட இறப்பதே நன்று என்று நாளும் யான் வருந்துகிறேன். மாடுகட்டிப் போரடித்தால் மாளாத அளவு செந்நெல் விளையும் தஞ்சாவூரில் எழுந்தருளியிருக்கும் பெருவுடையார் வழங்கிய செல்வத்தால் அடியேன் அமைத்துள்ள சிறிய வீட்டினைப் பிரகதீசனே! நீ சிதைத்து விளையாடக் கருத வேண்டாம்.*

*தாளாற்றித் தந்த பொருள் தக்கார்க்கும் தருதற்கேயாம். ஊருணியாய்ப், பயன்மரமாய், மருந்தாகித் தப்பா மரமாய்த் தாம் பெற்ற செல்வம் சிறிதளவேனும் பிறருக்கும் பயன்பெற வாழ்வதே சிறந்த மானிட வாழ்வு.*

## 9. சிறுபறைப் பருவம்

82. துணையாகப் பிணைதேடித் துவளு வோர்க்கும்

தொல்லியல்பில் வறுமையினால் துன்புற் றார்க்கும்

கணையாகப் பாய்துயரால் கவலுற் றார்க்கும்

கடன்பட்டு நெஞ்சத்துட் கலங்கு வார்க்கும்

பணைபோலும் தோள்கொடுத்து நங்கூ ரம்போல்

பரம்பொருளே ! பெரும்பொருளாய்த் தாங்க வேண்டிப்

பிணையாகத் தஞ்சையிலே பிரக தீசா !

பேரருளால் சிறுபறையை முழக்கு வாயே !

*கருத்துரை : -*

*மானிடருள், பெண்மானைத் துணையாகத் தேடும் ஆண் மானைப் போன்று ஏங்கி வருந்துவோர்க்கும், இயல்பாகவே நெடுநாளைய குடும்ப வறுமையினால் துன்பம் அடைந்திருப்போர்க்கும், வில்லினின்று விரைந்து வந்து பாய்கின்ற அம்பினைப்போல் நாளும் வந்து தாக்குகின்ற துயரங்களால் கவலைப்படுவோர்க்கும் வாங்கிய கடனைத் திரும்பக் கொடுக்க முடியவில்லை என்று நெஞ்சுக்குள்ளேயே புழுங்குவோர்க்கும், கடலில் கப்பலைக் கலங்காதவாறு உறுதியாகப் பற்றிக் காக்கும் நங்கூரம்போலப் பனைபோன்ற நின் பருத்த தோள் கொடுத்துக் காப்பதற்காக எங்கள் பொருட்டுத் தஞ்சையிலே பிரகதீசனாய் நின்றருளுகின்ற எம்பெருமானே! உன்னுடைய பேரருள் எமக்குத் தொடர்ந்து கிட்டுமாறு சிறுபறையை முழக்குவாயாக!*

*பெண்துணைக்காகப் பெரிதும் ஏங்கித் தவிக்கும் ஆண்கள் பலர். பன்னாளாய்ப் பழகிப்போன வறுமையில் உழல்வார் பலர். இன்பமும், துன்பமும் மாறி வருவதுதான் வாழ்க்கை என்ற போதிலும் தொடர்ந்து துன்பங்களில் சிக்கித் தவிப்போரும் பலர். ஆனால் பெற்ற கடனை உரிய முறையில் திரும்பக் கொடுக்க முடியவில்லையே என நாணுவார் மட்டும் இன்றையநாளில் சிலரே. பெருந்துயர் போக்கும் பேராளன் பிரகதீசன். அவன் திருவடி வீழ்வோம்; தீவினை நீங்கி வாழ்வோம்.*

83. குளிரந்திப் போதுவரை குவலயத்தின் பசிபோக்கக்

குழைந்துதினம் உழைக்கு மக்கள்

ஒளிரந்தி வானிலவாய் உயர்கின்ற நாள்வரைக்கும்

நினைந்துமனம் மகிழு மாறே

வளர்நந்தி வரவுக்காய் வாசலிலே காத்திருக்க

வரம்பலவாய் வழங்கும் தேவே !

இளமந்தி விளையாடும் எழில் தஞ்சைப் பெருமானே !

சிறுபறை முழங்க வாவே !

*கருத்துரை :-*

பகல் பொழுதின் வெப்பம் தணிந்து மாலைப்பொழுது குளிர்ச்சி தருவது இயற்கையின் தன்மை. அந்த மாலைப் பொழுது வரையிலும் உழைத்துப் பூவுலக மக்களின் பசிபோக்கப் பல உணவு தானியங்களை விளைவிக்கும் மக்கள் வானில் தோன்றும் ஒளிமிக்க நிலவு போல் உயர்வு பெறுகின்ற நாளுக்காகக் காத்திருக்கின்றனர். அவர்கள் எண்ணி எண்ணி மகிழ்ச்சி அடையும் வகையில், இறைவா! உன்னை வணங்கப் பெரிய கோயில் வாசலில் நந்தித் தேவரின் அனுமதிக்காகக் காத்திருக்கின்றனர். எம்போன்ற அவ்வடியார்களுக்கு வரங்களை வழங்கும் இறைவனே ! இளமையான குரங்குகள் மரங்களில் தாவி விளையாடும் சோலைகள் நிறைந்த அழகிய தஞ்சாவூரில் கோயில் கொண்டுள்ள பெருவுடையாரே! அய்யனே! பிரகதீசனே! மகிழ்ச்சியுடன் சிறுபறையைக் கொட்டி முழக்குவீராக !

பகலெல்லாம் உழைத்து ஓடாய்த் தேயும் உழைப்பாளர்கள் தாம் பசியோடு இருந்த போதும் உற்பத்திப் பெருக்கத்தைக் காட்டி உலகுக்கு உணவளிப்பவர்கள். அவர்கள் வறுமையில் வாடும் போதும் அன்பிலும் பண்பிலும் வானிலவாய் உயர்ந்து வலம் வருவர். சிவனார் அருள்பெற நந்தியார் அனுமதி வேண்டும். நந்தித்தேவர் வழிவிட்டால்தான் நாதனை வழிபட இயலும். தஞ்சைப் பெரிய கோயிலில் இந்தத் தத்துவம் விளங்கும். திருப்புன்கூரில் நந்தனார் வரலாறு வழி அறியலாம்.

84. பனியேறப் பகையோட்டும் பகலோன் தேர்க்கால்

பரியோடும் வழுக்கச்செய் நறுந்தேன் பாயும்;

கனியேறிப் புள்ளீர்க்கும் தருவில் சிந்தும்

கழனியெலாம் கதிர்முற்றிச் செந்நெல் சாயும்;

நுனியேறிக் கீழ்மரத்தை வெட்டிச் சாய்க்கும்

நுணுக்கமிலா அறியாமை அறவே மாயும்;

முனியேறிப் பவம்புரியும் சிந்தை மாற்ற

முன்வந்து சிறுபறைதான் முழக்கு வாயே!

கருத்துரை : -

தஞ்சைப் பெருவுடையாரே ! நின்னுடைய அருளாட்சியில் மிகுந்த இருளையும், பனியையும் விரட்டி ஓட்டுவதற்காக எழுந்து வருகின்ற பகலோனின் தேரில் பூட்டப்பெற்ற ஏழு குதிரைகளின் கால்களும் வழுக்குமாறு தஞ்சை சூழ் சோலைகளில் உள்ள மலர்களிலிருந்து சுவையும் மணமும் மிக்க தேன் பாய்ந்து ஓடிக் கொண்டிருக்கும். பறவைகளைக் கவர்ந்து இழுக்கின்ற பழ மரங்களிலிருந்து பழங்கள் சிதறிவிழும் வயல்களில் எல்லாம் நெற்கதிர் முற்றிச் சாய்ந்து கிடக்கும். நுனிமரத்தில் ஏறி அடிமரத்தை வெட்டிச்சாய்க்க நினைக்கும் நுட்பமில்லா அறியாமையானது தஞ்சைப் பகுதியில் இல்லாமல் அழிந்திருக்கும். இத்தகைய வளங்கள் நிறைந்திருப்பினும் சினத்தால் பல பாவங்கள் செய்கின்ற சிலரின் சிந்தையை மாற்றி யாவர்க்கும் நலமே வழங்க இறைவா! நீ, தானாகவே முன்வந்து சிறுபறை முழக்கி அருள்பொழிவாயாக!

கதிரவனின் ஏழு வண்ணங்கள் ஆதவனின் அழகுக் குதிரைகள். அவற்றை வழுக்கச் செய்யும் தேன் நிறைந்த சோலைகள், பழுமரங்கள் தஞ்சையில் பல; கதிர் முற்றிச் சாய்கின்ற கழனிகளும் உள. நுனிமரமேறி அடிமரம் வெட்டிய பாமரன் மகாகவியான வரலாற்றை மாகாளியின் அருளால் அறியலாம். பெரியநாயகியோடமர் பெருவுடையாரை வணங்கிடின் பேரறிவு பெறலாம்.

85. முப்புர மெரித்த முழுமுதற் பொருளே ! நீ
மூன்றாம்கண் திறந்த போதும்
அப்பழுக் கற்ற அருந்தமிழ்ப் புலவன்
நக்கீரன் வாதம் ஏற்றாய் !
அப்பருக் கிழைத்த அநீதி காத்தே
அண்டங்கள் வியக்க வைத்த
செப்பருஞ் செல்வமே ! சிவபெரு மானே !
சிறுபறை முழக்கு வாயே !

கருத்துரை : -

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளே ! எம்பெருமானே ! நீ நெற்றிக்கண்ணைத் திறந்து சினத்தை வெளிப்படுத்திய வேளையிலும, சற்றும் குறைவில்லாத பற்றினைத் தமிழ் மீது கொண்டிருந்த நக்கீரனின் கருத்து வாதத்தை ஏற்று அவர்தம் தமிழோடு விளையாடி உலகுக்கு உணர்த்தினாய், திருநாவுக்கரசர் பெருமானை மதமாற்ற முயற்சி செய்து அன்றைய ஆட்சியாளர்கள் பல்வேறு இடையூறுகள் செய்த போது அப்பரைக் காப்பாற்றி அருள் வழங்கி உலகினரை வியப்படையச் செய்தாய். சொல்லுதற்கரிய சிறப்புமிக்க செல்வமே ! சிவபெருமானே! பிரகதீசனே! நீ எம் வாழ்வும் செழித்தோங்கச் சிறுபறை கொட்டி மகிழ்விப்பாயாக!

திரபுரங்களாவன :

அரக்க அரசச்சகோதரர்கள்

| | | |
|---|---|---|
| பூலோக எஃகுக்கோட்டை | - | தாருக்கன் |
| வானவெளி வெள்ளிக்கோட்டை | - | கமலாக்கன் |
| தேவலோகத் தங்கக்கோட்டை | - | வித்துன்மாலி |

நக்கீரனைச் சுட்டதும் நெற்றிக்கண், பிறகு மீட்டதும் நெற்றிக்கண். சூலைநோயால் தவித்துச் சமணத்தினின்று சைவத்திற்கு ஈர்க்கப்பெற்ற அப்பரை ஆட்கொண்டு அருள்பொழிந்தவன் இறைவன். நாமும் அவன் திருவருள் பெறத் தஞ்சாவூர் விரைவோம்.

86. நீணெடுங் கண்ணார் நினைவிலே உழன்றும்

நெஞ்செலாம் காமத் தீயிலே கனன்றும்

தோணெடுங் கூந்தற் பாயிலே பயின்றும்

துயரெனும் தொடரும் நோயிலே சுழன்றும்

வாணெடும் போர்க்கே வாழ்வெலாம் பயந்தும்

வஞ்சியர் குழையும் பேச்சிலே நயந்தும்

நீணெடுங் காலம் வீணெனக் கழித்தோர்

நிலைதனை மாற்றச் சிறுபறை முழக்கே!

கருத்துரை : -

காதளவும் நீண்ட கண்களையுடைய பெண்களைப் பற்றிய எண்ணத்திலேயே எப்போதும் வாழ்ந்து நெஞ்சமெல்லாம் காமம் என்னும் நெருப்பு கொழுந்து விட்டு எரியுமாறும், தோளிலே நீண்டு அடர்ந்து விழும் கூந்தலாகிய பாயிலே நாளும் வீழ்ந்து கிடந்து துன்புறுவதும், வாழ்க்கையில் வாளெடுத்துப் போர் புரியும் துணிவின்றிப் பயந்து நடுங்குவதும், பெண்கள் மிகக்குழைந்து பேசும் பேச்சிலே மயங்கித் தம்மை மறப்பதும் என நீண்ட நாள்களைத் தம் வாழ்நாளில் வீணாகக் கழிக்கின்ற இளைஞர்கள் மற்றும் பலரின் நிலைமையை மாற்றி அவர்களை நன்னெறிப் படுத்தி நாடுவளம்பெற எம்பெருமானே! பெருவுடையாரே! சிறுபறை முழக்கியருள்வாயாக!

மங்கை நினைவும் மற்றும் அவர்தம் கண்கள், கூந்தல், பேச்சு என மயங்கி வீழ்வதும், காமம் ஒன்றே வாழ்வென வாழ்வதும் மனத்தைக் கெடுத்து மானிடரை வீழ்ச்சியடையச் செய்யும். மகேசனை எண்ணி மனித நேயம் மலரத் தஞ்சைப் பிரகதீசனை வழிபடுவோம்

87. நூலறாச் சுவையிலே நுவலும் பாவலர்
சிந்தையைக் கலைக்கு மாறும்
காலறாச் சோலையில் காளையர் காய்ந்திடக்
காலைநன் மாலை யென்றே
சேலறா விழியுடன் சேர்விழி வீழ்த்திடும்
செவ்விதழ் நீங்கி பாத
தாலறாப் பாட்டிலே தாய்க்குலம் போற்றிடச்
சிறுபறை முழக்கு வாயே!

*கருத்துரை : -*

*சற்றும் குறைவில்லாமல் சொற்சுவை, பொருட்சுவைகளைக் கூட்டி, நூல்களைப் படைத்து உலகுக்கு வழங்கும் புலவர்தம் சிந்தையைக் கலைத்திடுமாறும், குளிர்ந்த காற்று வீசுகின்ற சோலைகளில் காளையர்கூட்டம் காலை முதல் மாலை வரை நேரம் போவதே தெரியாமல் ஏங்கித் திரியுமாறும், மீனின் தோற்றத்தையும் பாய்ச்சலையும் உடைய பெண்களின் கண்களால் காண்பவரைக் கவர்ந்திழுத்துக் காதல் வலையில் வீழ்த்திடும் பாவையர் இனமான தாய்மார்களின் சிவந்த இதழ்களிலிருந்து நீங்காத தாலாட்டுப் பாட்டு தாய்க்குலமே பாராட்டும்படியிருக்கும். அத்தகு தாய்க்குலத்தையும் தாய்மார்களையும் பெண்ணினத்தையும் காப்பாற்றியருளப் பிரகதீசனே! சிறுபறை முழக்குவாயாக!*

*இலக்கியம் என்பது கற்பாரைக் கவரும் கருத்துச் சுவையும் சந்தமும் அமைய இயற்றப்பெற வேண்டும். சிந்தை கலைந்தால் சிறந்த இலக்கியம் உருவாக வாய்ப்பில்லை. தாய்க்குலம் போற்றும் தயாபரன் தஞ்சைப் பிரகதீசன். அவன் திருவடி தொழுது தேவைகள் தீர்ப்போம்.*

88. தீதுலவும் பார்வையினில் தேக்கிய நச்சுத்
தேன்பருகத் துடித்திடுமென் நெஞ்சும் மார்பின்
மீதுலவும் மெல்லாடை யூடுருவக் கண்கள்
மீன்கொத்தும் புள்ளெனவே பாயும் முல்லைப்
போதுலவும் வரிசையெனப் புறங்காட்டும் வெள்ளைப்
புன்சிரிப்பே போதுமென வாழ்வோர் காக்க
மாதுலவும் மேனியனே! மண்ணாசை போக்க
மணிக்கரத்தாற் சிறுபறை முழக்கு வாயே!

*கருத்துரை : -*

*இந்நிலவுலகில் மானிடர் பலரின் நெஞ்சம் காமமெனும் தீயை உமிழ்கின்ற, நஞ்சினைத் தேக்கிய பாவையரின் பார்வைத் தேனைப் பருகத்துடித்துக் கொண்டிருக்கும்; பெண்களின் மார்பகங்களை மூடுதற்காக அவர்கள் அணிந்துள்ள மெல்லிய ஆடையின் இடையே ஊடுருவி அழகைக் கண்டு சுவைக்க மீன்கொத்திப் பறவைகள் போல் பலருடைய கண்கள் பாய்ந்து கொண்டிருக்கும்; மேலும் வெண்மையான முல்லைப் பூக்களின் வரிசையைப் போல வெளிக்காட்டும் பெண்களின் புன்சிரிப்பே போதும் எனப்பலரின் எண்ணம் ஏங்கிக் கொண்டிருக்கும். இவ்வாறு காமத்தில் காலம் கழிப்பவரை மனம் திருந்தச் செய்து தூய வாழ்வில் வாழ்ந்து நலம்பெறச் செய்து காப்பாற்ற, உமையம்மையாகிய பெண்ணைத் தாங்கியுள்ள மேனியுடைய பரம்பொருளே! பிரகதீசனே! உன் அழகிய கரங்களால் சிறுபறையை முழக்குவாயாக!*

*நினைந்திருக்கும் போதெல்லாம் காமத்தீயைப் புனைந்திருக்கும் மாந்தர் வாழ்வு பொசுங்கி விடும் என்பது திண்ணம்; வளமான வாழ்வு நிலைபெற வளர்த்துக் கொள்வோம் பிரகதீசனைப் பற்றிய எண்ணம்.*

**89. அருளுந்தி ருக்கண்ணார் ஆலயத்தே வீற்றிருந்து**

**அன்பர்பணி செய்துபிணி போக்கவேண்டி**

**இருளந்தி வேளையிலே இதயங்கள் கோடிபல**

**இருங்கடலின் தரங்கமெனக் கரங்குவிக்கத்**

**திருநந்தித் தேவருக்கு அபிடேகப் பால்வழங்கத்**

**திங்களிரு முறைவந்து தொழும்போதில்**

**பொருளுந்தி மேலோங்கிப் புகழ்விளங்கச் செய்விக்கும்**

**செல்வமே!நீ, சிறுபறைதான் முழக்குவாயே!**

*கருத்துரை : -*

*மானிடர் தம்மைப் பற்றியிருக்கிற பிணிகளைப் போக்கிக்கொள்ள, அருள்மழைபொழியும் அழகிய கண்களைக் கொண்ட பெருவுடையார் வீற்றிருக்கும் தஞ்சைப் பெரிய கோவிலில் தங்கிப் பகலிரவு பாராமல் அடியவர்களுக்குப் பணிவிடை செய்கின்றனர். மாதமிருமுறை பிரதோச நன்னாளில் அந்திசாயும் மாலை வேளையில் ஆயிரக்கணக்கில் கடலலையாய்த் திரண்டு திருநந்தித் தேவருக்குப் பாலாபிசேகம் செய்து தொழுதிடக் கரங்களைத் தலைமீது குவித்து மனமுருகி வழிபடுகின்றனர். இத்தகு தூய பக்தியுடையோர்க்குப் பொருள் வழங்கி உயர்ந்த, புகழ்மிக்க வாழ்வைத் தரும் சிவபெருமானே! செல்வமே! அடியவர்களின் உயர்வுக்காக நீ சிறுபறையை முழக்குவாயாக!*

*சிவாலயங்களில் திங்கள்தோறும் பதினைந்து நாள்களுக்கு ஒருமுறையாக இருமுறை பிரதோசம் நடைபெறும் என்பது நாடறிந்த ஒன்று. நந்திக்குச் சிறப்பான பூசைகள், வழிபாடுகள் செய்து பயன்பெறக் கோடிக்கணக்கில் பக்த கோடிகள் இராசராசேச்சுரத்தில் நிகழும் பிரதோச வழிபாட்டில் தொடர்ந்து ஏழுமுறைக்கு மேல் கலந்து கொள்வாராயின் எல்லா நலமும் வாய்க்கும் எனச்சான்றோர் கூறுவர்.*

90. சந்தமுறப் பாவியற்றும் சங்கத்தமிழ்ப் பாவலனாய்
வந்தவுன்றன் திருப்பெயரை வாய்சொன்னாலே
சிந்துநதி வந்திங்குச் சிறகடிக்கும் சிலவேளை
கங்கைநதி கூடவந்து கையடங்கும்
இந்துமதி தரையிறங்கி வாசலுக்குக் கோலமிடும்
காவிரியும் கண்விழித்துக் கவரி வீசும்
கந்தனவன் தந்ததிரு மந்திரத்தின் பொருள்விளங்கத்
தஞ்சையிலே சிறுபறை முழக்குவாயே !

கருத்துரை : -

கொங்குதேர் வாழ்க்கை எனும் பாடலைச் சந்தமுற இயற்றி மதுரைத் தமிழ்ச் சங்கத்திற்குப் புலவர் கோலத்தில் வந்து அருள்புரிந்த நின் திருநாமத்தை எம்வாயால் சொன்னாலே சிந்துநதி வந்து எமை வாழ்த்திச் சிறகடித்துப் பறக்கும்; கங்கை நதிகூடச் சிலநேரம் எம்கையில் வந்து அடங்கிவிடும்; இளம்பிறை நிலவு தரையிறங்கி வந்து எம்வீட்டு வாசலில் கோலமிட்டு நிற்கும்; காவிரியும் இரவு பகலாகக் கண்ணிமையாமல் எமக்குக் கவரி வீசும். பிரகதீசனே! சுவாமிமலையில் சுவாமிநாதனாய் முருகன் விளக்கிய பிரணவ மந்திரத்தின் பொருளை எமக்கும் விளங்குமாறு செய்து தஞ்சையிலே சிறுபறை முழக்குவாயாக!

நெற்றிக்கண் திறந்தும், சிவனென்றறிந்தும் பாடலில் குற்றமே என வாதிட்ட நக்கீரனின் தமிழ்த்திறம் காட்ட நாடக மாடிய நாதனின் திருக்கோலம், தமிழ்ப்புலவன். தமிழறிந்தார் தஞ்சை நாதனை வழிபட்டால் தமிழும் சிறக்கும்; புகழும் நிலைக்கும்.

91. கொடுப்பதிலே சிலருக்குக் கொள்ளையாசை கேளாமலே
கொடுத்துவரும் பேறு தன்னைத்
தடுப்பதிலே பலருக்கு தனித்த ஆசை தாராமலே
தந்தவர்மேல் கணைகள் தம்மை
விடுப்பதிலே வீணருக்கு வேண்டியாசை நின்பாதம்
விரைந்திவர்கள் திருந்தி நற்பேர்
எடுப்பதிலே என்னிதயம் கொள்ளுமாசை ஏற்றருளிச்
சிறுபறைதான் முழக்கு வாயே!

*கருத்துரை :-*

*வறுமை வாய்ப்பட்டுழலும் மானிடர்க்குக் கொடுத்துதவுவதில் சிலருக்கு ஆசையுள்ளது. எவருடைய இசைவும் பெறாமல் கொடுத்து மகிழ்ச்சி அடைவோரைத் தடுப்பதில் பலருக்குத் தனித்த ஆசை மிகவேயிருக்கிறது. தாமும் பிறருக்கு வழங்காமல், வழங்குகின்றவர் மீது பழியைச் சுமத்தி வீண்பேச்சு பேசுகின்ற ஆசை சிலருக்குள்ளது. இத் தீய எண்ணங்களைக் கொண்டவர்கள் விரைவில் நின் திருவடி வணங்கி நற்பெயர் எடுக்குமளவிற்கு மனம் திருந்த வேண்டும் என்பதில் எம்மிதயம் ஆசை கொள்கிறது. எம் வேண்டுகோளை ஏற்று அருள்வழங்கச் சிறுபறை முழக்குவாயாக!*

*கொடுக்க வேண்டும்; கொடுப்பவரைத் தடுக்காதிருக்க வேண்டும் எனும் தூய எண்ணத்துடன் பெருவுடையாரை வணங்கினால் தீய எண்ணங்கள் நம் நெஞ்சைவிட்டு நீங்கும்.*

## 10. சிறுதேர்ப் பருவம்

92. நாகவிடம் தணிவித்த நாதன்திருப் பாதம்

நாயன்மாரைப் பணிவித்த வேதத்திருப் பாதம்

ஆகமங்கள் அணிவித்த அய்யன்திருப் பாதம்

அண்டசரா சரங்கள்தொழும் அன்புத்திருப் பாதம்

போகஇடம் தேடுமனம் கூடும்திருப் பாதம்

பொய்யான வாழ்வின்வழி போக்குதிருப் பாதம்

தேகமனப் பாவமெல்லாம் தீர்க்கும்திருப் பாதம்

தஞ்சையில்சிறு தேர்செலுத்தும் தலைவன்திருப் பாதம்

கருத்துரை :-

இறைவனுடைய அருள்பெற்றோர்க்கு நாகப்பாம்பின் விடத்தைப் போக்கியருளியவையும், நாயன்மார்களை ஆட்கொண்டு மறைத்திறம் வழங்கியவையும், திருமறைகளின் பொருள் விளக்கி மாந்தர்க்கு அளித்தவையும், உலகனைத்தும் வணங்கும் திருவருள் கொண்டவையும், சென்று சேர்ந்து நல்வாழ்வு பெறவேண்டும் எனத்தஞ்சம் அடையும் மனங்கள் கூடும் இடமாயிருப்பவையும், வஞ்சக வாழ்வு வாழ்வோரின் மனமாற்றிப் பழியைப் போக்குபவையும், மனம், வாக்கு, காயம் இவற்றின் வினைவழி சேர்த்த பாவங்களையெல்லாம் தீர்ப்பவையும் தஞ்சையம்பதியில் சிறுதேர் செலுத்தி விளையாடும் பிரகதீசனின் திருப்பாதங்களேயாகும்.

விடம் நீங்கி, அருள்வாங்கி, மறைப்பொருள் தேங்கி, மனம், மொழி, செயல்களின் தூய்மை ஓங்கி விளங்கத் தஞ்சைப் பெருவுடையாரைத் தஞ்சமடைவதே தலையாய வழியாகும்.

93. முத்தியெலாம் பெற்று மூலவரின் தாளிணைய

முற்பிறவி செய்த தென்னே?

பத்தியிலாச் சிந்தை பரிதவிப்பில் ஆழ்ந்தே

பலவேளை கழித்த தென்னே?

தத்தியுலாங் கிள்ளை கொத்திவிழும் கனிபோல்

தரணியில் முதன்மை யான

சித்தியெலாம் பெற்றுச் சித்தமெலாம் ஓங்கச்

சிறுதேர் உருட்டி வாவே!

*கருத்துரை :-*

*இறையருள் முழுமையும் பெற்று அவன் திருவடிப் பேறுபெற்ற முன்னோர்கள் அப்பெருநிலை அடைய அவர்கள் செய்த தவம் முதலானவற்றையெண்ணி எவ்வாறு வியப்படைவது? இன்றைய நிலையில் பக்தியிலாச் சிந்தையுடன் பல செயல்களில் ஈடுபட்டுப் பரிதவித்து மக்கள் வாழ்நாளைக் கழித்து வருகின்றனர். இந்நிலைக்குக் காரணந்தான் யாது?*

*தத்திப் பறக்கும் கிளிக் கூட்டங்கள் கொத்தித் தின்னும் சுவைநிறைந்த பழங்களைப் போல் உலகில் இனிமையான வாழ்வு வாழ்ந்து கடவுள் சிந்தை ஓங்கி நிறைந்த இன்பம் பெற்று யாம் வாழ்ந்திட அருள்வழங்கிப் பெருவுடையார்ரே! நீர் சிறுதேர் உருட்டி விளையாடுகவே!*

*பக்தி பெற, முக்திபெறச் சித்தமெல்லாம் சிவத்தையே நிறைத்திடுவோம்; வினைவலியின் கொடுமைகளைக் குறைத்திடுவோம்.*

94. அறைபட்டுப் பொன்னுதிர்த்த மேருவென நாளும்
அடியவர்க்குத் தொண்டுசெயும் அருளுடையார் நாட்டில்
மறைபட்டுக் கிடந்ததிரு முறைகொணர்ந்து தில்லை
மறையவர்க்குத் திறங்காட்டி மாமறைகள் காத்த
திறைகொட்டும் குடிகொண்ட திறஞ்சேர்த்த வேந்தன்
திறங்கொட்டிக் கண்டவர்தம் கரங்கொட்டிப் போற்றும்
கறைக்கண்டன் திருக்கோயில் கண்டிருக்கும் தஞ்சை
களிப்படையச் சிறுதேரை உருட்டிவா செல்வா!

*கருத்துரை : -*

*சிவபெருமானிடம் பாண்டியன் வேண்ட மலர்ச்செண்டால் பாண்டியனிடம் அடிவாங்கிய இமயமலையானது பொன்னைக் கொழிப்பதும் பொன்மயமான ஒளியை உமிழ்வதுமாக உள்ளது. பொன் முதலான பொருள்களை வழங்குகின்றது. இதுபோல் சிவனை வணங்கும் அடியவர்க்குத் தொண்டு செய்கின்ற அடியவர்கள் நிறைந்த நம் நாட்டில், பன்னிரு திருமுறைகளும் தில்லையிலே மறைக்கப்பட்டுக் கிடந்தன. இராசராச மன்னன் திருமுறைகளை மீட்டுவந்து தமிழர்தம் பெருமையை நிலை நாட்டினான். திறைப்பொருள்களைக் கொட்டும் குடிமக்களைப் பெற்றிருந்த இராசராசனின் பெருமைகளைத் தமிழர் உலகம் கரங்கொட்டிப் பாராட்டும். தஞ்சையிலே கோயில் கொண்டிருக்கும் கறைக்கண்டனே! தஞ்சாவூர்ப் பகுதி மக்கள் எல்லாவளங்களும் பெற்றுப் பெருவாழ்வு பெறச் சிறுதேரை உருட்டி விளையாடுவாயாக!*

*பாண்டிய நாட்டு வறுமை நீங்கச் சிவபெருமான் மேருவை மலர்ச் செண்டால் அறையச் சொன்னார். பொன்மேனியன் பொன்மேருவை ஆள்கிறான். தில்லைவேதியர்கள் திருமுறைகளை நாயன்மார்கள் வந்தே பெறவேண்டும் என்று கூற, இராசராசன் நால்வரின் திருவுருவங்களுடன் சென்று "வந்துள்ளனர்" என வாதிட வேதியர் மறுக்க "இவர்கள் சிலையெனில் நடராசரும் சிலையே! ஏன் பூசை?" என்று மன்னன் வினவி, வேதியர் தவற்றை உணர்த்தித் திருமுறைகளைப் பெற்று வந்தான்.*

95. கல்லாத பேருக்குக் கற்பிக்க வந்ததிருக்

கற்கோயில் கொண்ட நேசா !

செல்லாத ஊருக்குச் சேர்வழி காட்டுகிற

செஞ்சடை கொண்ட ஈசா !

பொல்லாத பேருக்கும் பொல்லாங்கைப் போக்கிடுநற்

புண்ணியா ! தஞ்சை வாசா!

நில்லாத வாழ்வுக்கு நிலையான பொருளூட்டச்

சிறுதேர் உருட்டி வா! வா!

*கருத்துரை : -*

*கல்வியறிவில்லாத மாந்தருக்குக் கல்வியறிவை வழங்கிக் கற்பிக்கத் தஞ்சாவூரிலே பெரியகோயில் கொண்டு எழுந்தருளியுள்ள பெருவுடையாரே! இதுவரையில் சென்றிராத புதிய ஊருக்கு வழியறியாமல் தவிப்பவர்க்கு நல்ல முறையில் சென்று சேர்தற்குரிய வழியைக் காட்டுகின்ற சிவந்த சடையுடைய பிரகதீசனே! தீமைகளே தம் செயலாகக் கொண்டு வாழ்கின்ற பொல்லாதவர்க்கு அவர்தம் மனப்பான்மையை மாற்றித் தீய குணங்களைப் போக்கி அருள்கின்ற பெருமானே! புண்ணியனே! தஞ்சைவாசனே! நிலையில்லாத வாழ்க்கைக்கு நிலையாமைத் தத்துவத்தின் பொருளுணரச் செய்து நிலையான வாழ்வு எது? என்பதை உணர்த்தும் பொருட்டு எம் இறைவனே! சிறுதேர் உருட்டி விளையாடிவருகவே!*

*கல்-என்றால் தோண்டு எனப்பொருள். கல் என்பதிலிருந்து வந்ததே கல்வி. ஆழ்ந்து கற்பதே கல்வி. கற்பாறைகளே கிடைக்காத தஞ்சாவூரில் கற்பாறைகளால் ஆன பெரியகோயில் பேரழகு வாய்ந்தது. அரிதின் முயன்று பல இடங்களிலிருந்து கொண்டு வந்து இராசராசன் இத்திருக்கோயிலைக் கட்டியது போன்று கல்லாத பேரும் பலவாறு முயன்று கற்க வேண்டும். பிரகதீசனின் பேரருள் கிட்டிடின் கல்வி நலமும் எல்லா வளமும் வந்து வாய்க்கும்.*

96. தூண்டுமொரு வேட்கையினால் தூக்கம் போக்கித்
துவளுகிற ஏழையர்க்கே துயருண் டாக்கி
யாண்டுபல பவக்குழியில் பழியைத் தேக்கி
யாநலமும் தமக்குமட்டும் உரிய தாக்கி
மூண்டுவரு பகைவரைப்போல் வாழு வோரை
முன்னின்று நெறிப்படுத்தும் முக்கண் வேந்தே!
வேண்டுகிற வரமருளத் தஞ்சை வந்தே
வினைதீர்க்கச் சிறுதேர்நீ உருட்டு வாயே!

கருத்துரை :-

மிகுதியான ஆசைகளைக் கொண்டிருக்கும் உள்ளத்தில் தோன்றும் பல ஆசைத் தூண்டல்களால் தூக்கத்தை இழந்து தவிப்போரும், வறுமையினால் துவண்டு கொண்டிருக்கும் ஏழைகளுக்கு அடுக்கடுக்கான துன்பங்களைச் செய்து பற்பல ஆண்டுகளாய்ப் பாவங்களையே சேர்த்து எல்லா நலங்களும் தமக்கு மட்டுமே உரிமையாக்கிக் கொள்ள நினைத்துச் சினம் பெருக நிற்கும் பகைவரைப் போலப் பிறருடன் எப்போதும் பேசிப்பழகி வாழ்கின்ற இயல்பு படைத்த மனித சமுதாயத்தை நன்னெறிப் படுத்த நாளும் அருள்பொழியும் மூன்று கண்களையுடைய பெருமானே! யாம் வேண்டுகின்ற வரங்களைத் தந்து, எம் தீவினைகளைப் போக்குதற்காகத் தஞ்சாவூரில் சிறுதேர் உருட்டி மகிழ்வாயாக!

நனவுநிலை, துணை நனவுநிலை, நனவிலி நிலை என மூன்று நிலைகளில் உள்ளம் எண்ணங்களைப் பதிவு செய்கிறது. இவை முறையே நினைவு, கனவு என்னும் உணர்வுகளாக வெளிப்படுகின்றன. ஆசைத் தூண்டல்கள் அதிகமானால் அமைதியான தூக்கம் வராது. நெஞ்சகத்தைத் தூய்மையாக்கி நிம்மதியான தூக்கம் வேண்டுமானால் தஞ்சைப் பெருவுடையாரைத் தவறாமல் தொழ வேண்டும்.

97. அறிவிலாப் பேச்சினால் அல்லலுற் றழிந்திட

அகந்தையில் அள்ளி வீசிக்

குறியிலாப் பண்புடை கூட்டணி அமைத்ததால்

கொண்டதைத் தொலைத்து நாளும்

நெறியிலாப் பயணியாய் நினைத்தவா றேகிடும்

நீசனாம் அடியேன் பக்திச்

செறிவிலாச் சிந்தையுள் சீர்நடம் புரிந்திடச்

சிறுதேர் உருட்டு வாயே !

*கருத்துரை : -*

*அறிவின்மையால் பயனற்ற, பிறருக்குத் துன்பம் தரக் கூடிய சொற்களை ஆணவத்தோடு மற்றவர் மீது வீசியதாலும், கொள்கைப் பிடிப்பில்லாத, நற்பண்பில்லாத நண்பர்களுடன் நட்பு கொண்டிருந்ததாலும் பெற்றிருந்த சிறப்பானதொரு வாழ்வைத் தொலைத்துவிட்டு வழிதெரியாமல் தடுமாறும் வழிப்போக்கனைப் போல் நாள்தோறும் வருந்தி வாழ்ந்து கொண்டிருக்கின்றேன். இழிந்த மனம் படைத்த நீசனாகிய அடியேனின் பக்திச் சிறப்பில்லாச் சிந்தனையைச் சீர்செய்து நின்மீது தொடர்ந்து பக்தி செலுத்தச் செய்வதற்காகவே சிறுதேர் உருட்டி மகிழ்வாயாக!*

*சொல்லற்க சொல்லில் பயனிலாச் சொல் என்பது பொய்யா மொழி. பயனற்ற சொற்களுடன் ஆணவத்தையும் கலந்து பேசினால் காலமும் பொருளும் வீணாவதோடு பெருங்கவலையும் வந்து சேரும். தீய நட்பு கொண்டார்க்குத் தெளிவு பறந்து போய்விடும். தம் வாழ்வில் தெளிவும் நிறைவும் வேண்டுவார் தஞ்சாவூர் பெருவுடையாரை வேண்டுவார்.*

98. சுரும்புறலும் கடிமலர்ப்பூஞ் சோலைக் கூடல்

வாழ்சுத்த சித்தியராய்க் கல்லா னைக்குக்

கரும்புண்ணக் கண்காட்டித் தில்லை மன்றுள்

கலைநடனம் புரிந்தொருகால் வாழ்த்து தந்தே

அரும்புள்ள மலர்மலியும் ஐயாற் றையா!

அப்பருக்கே அகங்கனிந்து அருள்பா லித்தாய்!

இரும்புள்ளம் நெகிழ்த்தென்னை எடுத்தாட் கொள்ள

இசைந்திங்குச் சிறுதேர்நீ உருட்டு வாயே!

கருத்துரை : -

நான்மாடக் கூடலாகிய மதுரையைச் சுற்றிலும் மணமிக்க தேன்நிறைந்த, வண்டுகள் சுற்றிச் சுழல்கின்ற மலர்களையுடைய சோலைகள் நிறைய உள்ளன. இங்குச் சோமசுந்தரக்கடவுள் சுத்தசித்தியராய்த் தோன்றிக் கல்லானையைக் கண்காட்டிக் கரும்புண்ணச் செய்தார். அவர் நடராசனாய்த் தில்லையம்பலத்தில் நடனம் புரிகின்றார்; ஒருகாலை உயர்த்தி எம்போன்றோரை வாழ்த்துகின்றார். அரும்புகளைப் போன்ற மென்மையான உள்ளங்கொண்ட மக்கள் நிறைந்த, அரும்புகள் மிகுந்த மலர்கள் பூத்துக் குலுங்கும் சோலைகள் சூழ்ந்த திருவையாற்றுக்குநாதனே! அப்பருக்குக் காட்சி தந்த பஞ்ச நதீசுவரனே! இரும்பு மனம் படைத்துப் பல தீமைகளைச் செய்து வாழும் என்னைத் திருத்தி ஆட்கொள்ள மனம் கொண்டு தஞ்சைப் பிரகதீசனே! இங்குச் சிறுதேர் உருட்டி எம்மையெல்லாம் மகிழ்விப்பாயாக !

சிவனடியாராய்ச் சுத்தசித்தியராய்த் தோன்றிய எம்பெருமானிடம் பாண்டியன் வினவக் கல்லானையைக் கண்ணால் சாடைகாட்டிக் கரும்புண்ணச் செய்தார். .

99. ஓடப்ப ராயிருக்கும் ஏழையர்க்கும் உறுபொருள்சீர்

உயரப்ப ராயிருக்கும் யார்க்கும்

தேடப்ப ராயிருக்கும் தேடரிய பரம்பொருளே!

தென்னகமே தெளிந்துபோற்றும் தஞ்சை

வீடப்ப ராயிருக்கும் வேள்விகொள் பெருமானே!

கதிர்வளையக் கரம்நீட்டும் பொன்னி

நாடப்ப ராயிருக்கும் நாயகனே! நாடொப்பச்

சிறுதேர்நீ உருட்டிமகிழ் வாயே!

*கருத்துரை :-*

*கையில் ஓடேந்தி இரந்து வாழும் வறியராய், வீட்டில் சமைத்தற்குப் பயன்படும் பொருள்கள்யாவும் தம் சமைத்தல் தொழில் மறந்து ஓடுகளாய்க் காத்திருக்கும் வறுமைமிக்காரும், மிகுதியான செல்வத்துடன் உயர்ந்த நிலையில் செழிப்புடன் வாழ்வதாய்க் கருதிக் காலங்கழிக்கும் செல்வம் மிக்காரும், அருள்பெறுதற்காகத் தேடிக்கொண்டிருக்கும் தேடுதற்கரிய பரம்பொருள் நீ! தென்னாட்டவர் போற்றும் தஞ்சையிலே கோயில் கொண்டு அருள்புரியும் வேள்விகளுக்கெல்லாம் தலைவன் நீ! நெற்கதிர் முற்றிச்சாய்கின்ற பெருவளம் கொழிக்கக் கரங்களால் கருணை காட்டும் காவிரித்தாய் பாயும் சோழநாட்டின் தஞ்சையிலே எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் நீ! நாடேமகிழ்ந்து நலம் பெறுமாறு சிறுதேர் உருட்டி மகிழ்ந்து எம்மையும் மகிழ்விப்பாயாக!*

*செல்வமும் வறுமையும் சிவத்திற்குப்பொது. பொன்கொழிக்கும் மேருமலையிலும், சாம்பல் பூசிக்கொண்டு சுடுகாட்டிலும் திருநடனம் புரிந்த தெய்வம் அவன். அம்பலத்தையும் ஆலங்காட்டையும் அணிமன்றாக்கிய ஆடல் நாயகன் அவன். உலகநாடுகளே வியந்துபோற்றும் ஒப்பற்ற பெருங்கோயில் கொண்டுள்ள பிரகதீசனை வழிபட்டால் நாமும் உயரலாம்.*

100. அலையெனக் கடலெனத் திரண்டிடும் படையுடன்

அயலமர் பகைவரைக் கவர்ந்திடு திறத்தொடு

மலையென மனத்திறல் படைத்திடு வளவனின்

கொடைவளக் களிப்பினில் குளிர்ந்திடு நிலமதன்

கலையமர் நிலைபெறு கவின்நகர் தஞ்சையில்

எழுந்தருள் பிரகதீ சனின்திரு வடிதொழத்

தலைவனாய்க் கரந்தரத் தனிமகிழ் வடைந்திடத்

தயாபர! எழுக! நீ, சிறுதேர் உருட்டவே !

கருத்துரை : -

கடல் அலைபோலத் திரண்ட படையுடன் பக்கத்தில் உள்ள பகையரசர்களை வெற்றி கொள்வதில் மலைபோன்ற மனஉறுதி கொண்ட சோழப் பேரரசர்களிடம் பரிசுப்பொருள்களைப் பெற்ற மகிழ்ச்சியில் திளைக்கின்ற நிலம் சோழநாடு. அந்த வளமிக்க சோழநாட்டில் கலையழகுடன் தலைநிமிர்ந்து நிற்கும் தஞ்சாவூரில் எழுந்தருளியுள்ள பிரகதீசனே! எமக்குத் தலைவனாய்க் கைகொடுத்து உதவிடவும், தனி மகிழ்ச்சிகொள்ளச் செய்யவும் கருணைபொழியும் கடவுளே! சிறுதேர் உருட்டி விளையாட மனமிரங்கி எழுந்தருள்கவே!

தஞ்சையைப் புறமாய் ஆண்ட சோழப்பேரரசர்களே கொடுப்பதில் பெருமகிழ்வடைந்தார்கள்; இங்கு வீற்றிருந்து இருநிலத்தைக் காக்கும் எம்பெருமானை வணங்கினால் நம்மை அகமாய் ஆட்கொண்டு அருள்வரங்களை அள்ளிக் கொடுப்பதில் அகங்குளிர்வான். அருட்பிரகாசன், பிரகதீசன் நம்மைப் பேரானந்தம் பெறச்செய்வான்.

101. கன்னனுக்குப் பொன்கொடுத்துக் கரஞ்சிவக்கும்; கண்ணிறைந்த
கந்தனுக்குப் பழத்துக்காய் முகஞ்சிவக்கும்;
அன்னமிடும் பூரணிக்கோ அகஞ்சிவக்கும்; அணிமன்றில்
ஆடியதிருப் பாதமதன் அருள்சிவக்கும்;
பொன்னிவளர் நதிக்கரையில் ஓங்கிநின்றே புகழ்த்தஞ்சைப்
புன்னைநல்லூர் தலைக்கொண்ட கோயிலின்றே
மன்னவனாம் மறைக்காடன் பிரகதீசன் மகிழ்மணி
மகுடமெனச் சிறுதேர்நீ உருட்டுவாயே!

*கருத்துரை :-*

*கர்ணனுக்குத் தம்மிடம் வந்து கேட்டார்க்கு இல்லை என்று சொல்லாமல் பொன்னும் பொருளும் கொடுத்துக் கைகள் சிவந்திருக்கும். அழகுக்கடவுளாம் முருகப்பெருமானுக்கு ஞானப்பழத்தைப் பெற வேண்டும், பெற முடியவில்லையே என்ற சினத்தில் முகம் சிவந்திருக்கும். நெற்றிக்கண் நாயகனுக்கே அன்னமிட்ட மகிழ்ச்சியில் அன்னை உமா தேவியின் உள்ளம் சிவந்திருக்கும். அழகு மிக்க தில்லைச்சிற்றம்பலத்தில் ஆடுகின்ற அம்பலவாணனின் திருப்பாதம் அருள் கூட்டிச் சிவந்திருக்கும். தஞ்சாவூரில் புன்னைநல்லூர் என்னும் மாரியம்மன் கோவில் தொடங்கிச் சாரம் அமைத்து நிறுவப்பட்ட பெரிய கோவில் காவிரித் தென்கரைச் சிவத்தலங்களில் ஓங்கிய சிறப்புடன் உயர்ந்து நிற்கின்றது. உலகாளும் பெருவேந்தனாம் பிரகதீசனின் அழகிய மணிமகுடமென உலகே புகழுமாறு, ஐயனே! சிறுதேர் உருட்டி விளையாடுவாயாக!*

*கன்னனுக்கும், கந்தனுக்கும் கரமும் முகமும் சிவந்தாற்போல், கருணையுள்ளம் கொண்ட தேவிக்கு அகம் சிவந்தாற்போல், சிவன்பாதம் அருளால் சிவந்தாற்போல், நம் பாதங்கள் சிவக்கப் பல திருத்தலங்கள் நடந்து, பரமனை வழிபட்டுப் பரவசப்படவேண்டும்.*

| வ.எண் | பாடல் தொடக்கம் | பாடல் எண் | வ.எண் | பாடல் தொடக்கம் | பாடல் எண் |
|---|---|---|---|---|---|
| 1. | அடைக்கலமென் | 53 | 27. | கருமேகப் | 63 |
| 2. | அப்பாக | 20 | 28. | கரும்பும் | 56 |
| 3. | அயலாரும் | 55 | 29. | கலக்கமுறு | 37 |
| 4. | அரங்கமாமணி | 57 | 30. | கல்லாத | 95 |
| 5. | அரவின் | 27 | 31. | கற்பூர | 13 |
| 6. | அருளுந்திரு | 89 | 32. | கற்றது | 19 |
| 7. | அலையென | 100 | 33. | கற்றவைக்கும் | 14 |
| 8. | அறிவிலா | 97 | 34. | கன்றுளே | 6 |
| 9. | அறைபட்டு | 94 | 35. | கன்னனுக்கு | 101 |
| 10. | ஆவினுள் | 32 | 36. | காதுலவு | 26 |
| 11. | ஆழ்கடலில் | 65 | 37. | காற்றோடு நீ | 76 |
| 12. | இம்மை | 30 | 38. | காற்றோடு | 69 |
| 13. | இரவுடையார் | 12 | 39. | குழவியொன்று | 61 |
| 14. | இளமந்தி | 10 | 40. | குளிரந்தி | 83 |
| 15. | உடையார்முன் | 54 | 41. | கூனலிளம் | 44 |
| 16. | உரம்படியும் | 52 | 42. | கொடுத்தாண்ட | 79 |
| 17. | உலைக்கரிசி | 39 | 43. | கொடுப்பதிலே | 91 |
| 18. | எழுத்துயிர்மெய் | 21 | 44. | சத்தியாய் | 4 |
| 19. | ஏழூர்க்கும் | 77 | 45. | சந்தமுற | 90 |
| 20. | ஓட்டிய | 35 | 46. | சந்திரன் | 31 |
| 21. | ஓட்டுவார் | 71 | 47. | சித்திரை | 43 |
| 22. | ஓடப்ப | 99 | 48. | சுந்தர | 62 |
| 23. | கண்ணிவெடி | 49 | 49. | சுரும்புரலும் | 98 |
| 24. | கத்துடல் | 68 | 50. | செலவிலொரு | 58 |
| 25. | கரிசல் | 41 | 51. | சொல்விளைந்து | 48 |
| 26. | கருப்புவில் | 70 | 52. | திரையுலாம் | 80 |

| வ.எண் | பாடல் தொடக்கம் | பாடல் எண் | வ.எண் | பாடல் தொடக்கம் | பாடல் எண் |
|---|---|---|---|---|---|
| 53. | தீதுலவும் | 88 | 79. | பாவேந்தர் | 59 |
| 54. | துணிகர | 36 | 80. | பிறப்புக்கும் | 22 |
| 55. | துணையாக | 82 | 81. | புயலுலவு | 24 |
| 56. | தூண்டுமொரு | 96 | 82. | பூச்சற்ற | 15 |
| 57. | தெக்கூரில் | 50 | 83. | பெண்ணாழிகை | 64 |
| 58. | தெருப்புற | 67 | 84. | பொங்கரி | 33 |
| 59. | தென்றலென | 60 | 85. | பொங்கும் | 2 |
| 60. | தேவாதி | 16 | 86. | பொருளுதவி | 5 |
| 61. | தொண்டர்சீர் | 18 | 87. | மஞ்சாலூர் | 42 |
| 62. | நறைக்கமல | 8 | 88. | மஞ்சை | 23 |
| 63. | நாகவிடம் | 92 | 89. | மண்ணுலகின் | 3 |
| 64. | நிலங்கொழிக்க | 38 | 90. | மறுபாதி | 74 |
| 65. | நினைவார்க்கு | 51 | 91. | முத்தியெலாம் | 93 |
| 66. | நீணெடுங்கண் | 86 | 92. | முப்புர | 85 |
| 67. | நூலறா | 87 | 93. | முல்லையம் | 47 |
| 68. | நெற்றியின் | 73 | 94. | வசந்தங்கள் | 40 |
| 69. | நைந்தாரின் | 66 | 95. | வருபெண்ணை | 17 |
| 70. | நோயிலே | 72 | 96. | வாழ்வற்று | 7 |
| 71. | பட்டாடை | 75 | 97. | வாள் சாய | 29 |
| 72. | பரஞ்சோதி | 46 | 98. | வான் மாட | 28 |
| 73. | பரியெலாம் | 25 | 99. | வெள்ளியொளி | 45 |
| 74. | பனியேற | 84 | 100. | வேழத்தின் | 1 |
| 75. | பாடகப்பை | 78 | 101. | வேற்கரத் | 9 |
| 76. | பாடுபட்டு | 81 | | | |
| 77. | பார்புனல் | 34 | | | |
| 78. | பால் வளர் | 11 | | | |

